KALKI 30.12.2007
ரூ.8.00 80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

நஞ்சை அருந்தும் பிஞ்சுகள்!



குர்காவுன் கோரம்!

# வீழ்த்தப்படுகிறார் விஜயகாந்த்?

- திரை மறைவில் தி.மு.க.

**Team Health Shoppe**
**For Wellness**




# அரிது, அரிது ஆலோவேரா அரிது !

## இயற்கை முறையினாலான ஆலோவேரா பொருட்கள்

பாரம்பரியமான அழகு சாதன மற்றும் உணவு பொருட்களை வழங்குகிறோம்.
வாருங்கள், வாழ்க்கைக்கு மேலும் மெருகேற்றுங்கள்.





**OPEN ON ALL DAYS**

இப்பொழுது
ஜி. என். செட்டி சாலை,
தி.நகரில்



**Also Available :** • Flax Seed Powder • Flax Seed Oil • Organic Products • Olive Oil



**TEAM EUBIO CARE** (Division of CAL)

**வண்டலூர்:** டீம் ஹவுஸ், (Opp. Vandalur Zoo) ஜி.எஸ்.டி. ரோடு, போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) Ph : 4269 3332

**இந்திரா நகர்:** 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், Ph : 4269 5115

**புரசைவாக்கம்:** எண்.23B, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ் (அபிராமி மெகாமால் எதிரில்) புரசைவாக்கம் ஹை ரோடு, Ph : 4542 8898

**தி.நகர் :** பு.எண்: 2, ப.எண்: 60, லலிதாகிருஷ்ணா அபார்ட்மெண்ட், கிரி ரோடு, (பாரதிராஜா மருத்துவமனை பின்புறம், ஜி.என்.செட்டிரோடு அருகில்). Ph : 4269 4849

For bulk requirements : Team House - GST Road, (Opp. Vandalur Zoo), Vandalur, Ch - 48. Fax : 22750860.

E-mail: teamhealthshoppe@drraoholdings.com | www.teamhealthshoppe.com




30.12.2007

# கல்கி












இளமையும் புதுமையும் கைகோக்கும்

புத்துணர்ச்சி ஸ்பெஷல்!

# பருஜோர் யோசனைகள்!

'ஒன்பது ரூபாய் நோட்டில்' தங்கரின் கைவண்ணம் மிளிர்கிறது. 'கல்கி'யின் விமர்சனத்தில் வார்த்தைக் கோப்பின் வனப்பு வசீகரிக்கிறது.

- சி.நாச்சிமுத்து, ஈரோடு

தாவர அறிவியல் சார்பானதும், மன பீதியின் எதிரொலிப்பைச் சுட்டுவதுமான இருவேறு மின்னல் கதைகள் மெகா அற்புதங்கள்!

- எஸ்.ஏ.கேசவன்,கு.கழுகாசலபுரம்

சுகாதாரத் துறை அமைச்சருக்கு 'சூசகமான டானிக் உங்கள் தலையங்கம்!

- வானவில் மூர்த்தி, கடலூர்

'அடையாளம்' சிறுகதையில் அபாரமாக வீசியது மண்ணின் மணம்!

- சாந்தி சுந்தர், நெய்வேலி

நடுத்தர வயதுடையவர்களின் கவனத்தைக் கவரக்கூடிய எச்சரிக்கை மணியாய் ஒலித்தது டாக்டர் அருள்மொழிவர்மனின் கட்டுரை.

- சி.மகேஷ், திருச்சி

இயக்குனர் எஸ்.பி.எம்., வாசகர்களை மயிலிறகால் தடவித் தம் பக்கம் ஈர்க்கிறார்.

- கே.எல்.காந்தரூபி, மேலகிருஷ்ணன்புதூர்

எம்.கே.தியாகராஜ பாகவதர் சமாதி பற்றி அன்னூர் பொன்மொழி கவலை தெரிவித்திருந்தார். அன்னாரைப் பாராட்ட வேண்டும்.

- நவம், சென்னை

ஜெயராமன் குறையைக் குணமாக்கியவர்கள், அன்பு பொங்கித் ததும்பும் குழந்தைகள் என்பது அன்பின் மகத்துவத்தைச் சுட்டிக் காட்டுகிறது.

- கே.வி.ராமன், சென்னை

சுஜாதாவின் வாரம் ஒரு பாசுரத்தை பட்டுக் கம்பளம் விரித்து வரவேற்கிறோம்.

- என்.காளிதாஸ், சிதம்பரம்

ஜாலி ஸ்டோர்ஸில் 'டைரிக் குறிப்புகள்' படித்துச் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகிவிட்டது.

- சி.மகேஷ், திருச்சி

கல்கி ராஜேந்திரனை மீண்டும் பேனாவை எடுக்கச் செய்திருப்பது அருமையான, சரியான காரியம்.

- நீ.ப.சிதம்பரநாதன், தென்காசி

## டியர் ரீடர்ஸ்...

உங்களின் மருத்துவச் சந்தேகங்களுக்குப் பதிலளிக்கக் காத்திருக்கிறார்கள் நிபுணர்கள். கேள்விகளை உடனே அனுப்புங்கள்!



## வட்டமேஜை

**க**டந்த கல்கி (9.12.2007) இதழில், 'கும்பகோணத்தில் நடந்த யாகத்தில் உயிர்ப்பலி அளிக்கப்பட்டது என்ற செய்தி குறித்து...?' என்று ஒரு கேள்வி. இதற்கு தராக அளித்த பதில் சேர்துக்காது, சிந்திக்காது கொடுத்த பதிலோ என்று தோன்றுகிறது. கல்கி வெளியிடும் அருள்வாக்கு பகுதியை வழங்கிய பரமாச்சார்யாரே யாகங்களில் உயிர்ப்பலி அளிக்கப்படுவதை சாஸ்திர ரீதியாக ஏற்றிருக்கிறார். கல்கி ஏன் எதிர்க்க வேண்டும்! இது போலித்தனம் அல்லவா!

**- டி.எஸ்.ராகவன், சென்னை**

*(பரமாச்சார்யார் ஏற்றாலும் கல்கி யாகங்களில் உயிர்ப்பலி கொடுப்பதைக் கண்டிக்கிறது. இதனால் பரமாச்சார்யார் வெளியிட்டுள்ள, வேறு பல மேலான கருத்துகளும் வழிகாட்டல் நெறிகளும் மறுப்புக்கோ, புறக்கணிப்புக்கோ உரியவை யும் அல்ல.)*

**- ஆர்**



## ஸ்பீடு போஸ்ட்

**மு**ன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் கலாமையும் பாடகி சுதா ரகுநாதனையும் சந்திக்க வெச்சு கலாய்ச்சுட்டியே வாத்தியாரே!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**அ**ன்பற்ற அணுகுமுறை தலையங்கத்தில், அன்புமணிக்குத் தாங்கள் கூறியிருந்த பண்பான யோசனைகள் படு ஜோர்!

**- எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**

வெளிநாடு *(விமானத்தபால்)* :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

''தமிழக இளைஞர்களே! பகுத்தறிவு என்னும் தராசுத் தட்டையும், திராவிட உணர்வு என்ற எடை கற்களையும் கொண்டு சீர்தூக்கிப் பார்த்துத் திடீர் கட்சி களையும் மின்மினித் தலைவர்களையும் ஒதுக்கிப் புறந்தள்ளுங்கள். 'புரட்சி' என்ற அடை மொழியுடன் இயங்குகின்ற தலை வர்களையும், தலைவிகளையும் புறக்கணி யுங்கள்'' - தி.மு.க.வின் புது வரவான தமிழச்சி, நெல்லை மாநாட்டில் ஆவேச மாகப் பேசிய பேச்சின் சாராம்சம் இது. திருச்சி சிவாவும் இதே ரீதியில் 'புரட்சி' அடைமொழி ஏற்றுள்ள தலைவர்களைச் சாட, சாதாரணமாகச் சர்ச்சையே கிளப் பாமல் அமைதியான நதி போன்று பேசும் பேராசிரியர் அன்பழகன் கூட, ''கொள் கையே இல்லாமல் கட்சியைத் துவங்கி, முதல்வராவதை மட்டுமே இலட்சியமாகக் கொண்டவர்கள்'' என்று ஒரு பிடி பிடித் திருக்கிறார்.

நெல்லை தி.மு.க. இளைஞரணி மாநாட்டின் டார்கெட் விஜயகாந்த் என்பதில் சந்தேகமில்லை. தேர்தல் பரீட்சை எழுதாததால் சரத்குமார் தப்பித் திருக்கிறார். தி.மு.க. - அ.தி.மு.க. மற்றும் வேறு பல கட்சிகளிலிருந்து தே.மு. தி.கவுக்குத் தாவுகிறவர்களின் எண்ணிக்கை ஏறிக்கொண்டே போகிறது.

கிராமத்து இளைஞர்கள், விவசாயம் பொய்த்துப்போன நிலையில், வேலை வாய்ப்பு இல்லாமல் வெறுமனே பொழு தைக் கழிக்கிறார்கள். தி.மு.க.- அ.தி.மு.க. ஆட்சிகளில் கொள்ளையடித்துக் கொழுத்து வளர்ந்திருக்கிற உள்ளூர்ப் பிரமுகர்களின் மேல் எரிச்சல்கொண்டு, தே.மு.தி.க. மற்றும் சமத்துவ மக்கள் கட்சியில் இவர் கள் இணைகிறார்கள். இதனால் இந்தக் கட்சிகளில் புதுவெள்ளம் பாய்கிறது. தங்கள் பக்கம் இலட்சக்கணக்கான மக்கள் இருக்கிறார்கள் என்று நிரூபிக்க வேண்டிய அவசியமும் பெரிய கட்சிகளுக்கு வந்து விட்டது. அதன் முதல் வெளிப் பாடுதான் தி.மு.க. இளைஞர் மாநாடு. இனி மற்ற கட்சிகளின் இளைஞர் மாநாடுகளும் தொட ரக்கூடும்.

''நான் வளர்ந்து வருவ தால் மாநாடு நடத்துகிறார்கள்'' என்று வெளிப்படையாகவே சொல்லியிருக்கிறார் விஜய காந்த். ''அவர் முதலில் வளர்ந்தாரா என்று மனசாட்சியைத்



தட்டிப்பார்த்துக் கேட்டுக் கொள்ளட்டும்'' என்று கிண்டலாகச் சொல்கிறார் தி.மு.க.வின் அமைப்புச் செயலாளரான டி.கே.எஸ்.இளங்கோவன். ''2006 பொதுத் தேர்தலில் அவர் கட்சி வாங்கிய வோட்டுச் சதவிகிதம் தேர்தலுக்குத் தேர்தல் குறைந்து வருவதை உணர்ந்தால் 'வளர்கிறேன்' என்று சொல்ல மாட்டார். அடுத்ததாக இவரை எதிர்த்தோ, இவர் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தவென்றோ, மாநாடு நடத்த வேண்டிய அவசியம் எங்களுக்கு இல்லை. முதலில், இவரிடம் 2011-ல் ஆட்சிக்கு



* ஜி.கே.மணி



* டி.கே.எஸ்.இளங்கோவன்

இருந்த சி.ஆர்.பாஸ்கரன், அதன் கொ.ப.செ.வாக இருந்த சித்தாமூர் ஆறுமுகம் போன்றோர் சமீபத்தில் தே.மு.தி.க.வில் சேர்ந்திருக்கிறார்கள்.

# வீழ்த்தப்படுகிறார் விஜயகாந்த்?

## -திரைமறைவில் தி.மு.க.

வரவேண்டும் என்பதைத் தவிர வேறு என்ன கொள்கை இருக்கிறது? மற்ற கட்சிகளில் வெறுப்போ, ஏமாற்றமோ அடைபவர்கள்தான் இவரது கட்சியில் இணைவார்கள்'' என்று இடிக்கிறார் டி.கே. எஸ்.இளங்கோவன்.

மற்ற கட்சிகளிலிருந்து வருபவர்களுக்குப் பொறுப்புக் கொடுக்கிறார் விஜயகாந்த். பொன்னுசாமி, கு.ப.கிருஷ்ணன் ஆகியோருக்குப் பொறுப்புக் கொடுத்திருக்கிறார். கடலூர் தாமோதரன் (அ.தி.மு.க), ஏ.ஜி.சம்பத்(தி.மு.க) என்று பல வடமாவட்ட பிரமுகர்கள் தே.மு.தி.க.வில் இணைந்திருக்கிறார்கள். ஜெகத்ரட்சகனின் இயக்கத்திலிருந்து பலர் விஜயகாந்திடம் சேர்ந்திருக்கிறார்கள். பா.ம.க.வின் துணைப் பொதுச் செயலாளராக

''நீங்கள் சொல்லும் நபர்கள் கட்சி விரோதச் செயல்களில் ஈடுபட்டதால் கட்சியிலிருந்து நீக்கப்பட்டவர்கள். தே.மு.தி.க.வில் சேருகிறவர்கள் பற்றி ஊடகங்கள் நல்ல விளம்பரம் கொடுக்கின்றன. ஆனால், எங்கள் கட்சியிலும் தினசரி இளைஞர்கள் இணைந்துகொண்டுதான் வருகிறார்கள். ஆரவாரமில்லாமல் இது நடக்கிறது'' என்கிறார் பா.ம.க. தலைவர் ஜி.கே.மணி. ''நாட்டின் வலுவான சக்தியாக விளங்குபவர்கள் இளைஞர்கள். அவர்கள், புகைப்பிடிக்கக் கூடாது; மது அருந்தக் கூடாது' என்று பத்து நல்வழிகளை வகுத்திருக்கிறோம். அந்த நெறிகளை இளைஞர்களிடம் வேரூன்றச் செய்ய மாவட்டம் தோறும் இளைஞர் மாநாடுகள் நடத்து



* பண்ருட்டி ராமச்சந்திரன்



* கோ.கலிவரதன்

கிறோம்'' என்று சொல்கிறார் மணி.

**க**டந்த இரண்டு மாத காலத்தில் பார்த்தால் (ஊடகச் செய்திகளின்படி) சுமார் 50,000த்துக்கு மேற்பட்டவர்கள் தே.மு.தி.க.வில் சேர்ந்திருக்கிறார்கள். இதில் 75 சதவிகிதம் இளைஞர்கள்தான்! தே.மு.தி.க. கூட்டங்களில் கூடுபவர்களின் சராசரி வயது இருபத்தைந்துதான். துணிச்சலாகச் சாலையில் இறங்கி, மக்கள் பிரச்னைகளுக்காகப் போராடும் குணமும் இந்த இளைஞர்களிடம் இருக்கிறது. விஜயகாந்தின் அரிதாரம் இல்லாத பேச்சு அவர்களைக் கவர்கிறது. அதேசமயம், எதிர்கால அரசியல் சக்தியாக நினைத்து முதலில் அவரோடு களம் இறங்கிய பலர், அவரது குடும்ப ஆதிக்கம் காரணமாக விலகியும் சென்றுவிட்டார்கள். குறிப்பாகச் சிறந்த மேடைப் பேச்சாளரான திருமயம் அழகுராஜ் விலகிவிட்டார். தென் தமிழகத்தில் பல தே.மு.தி.க. பிரமுகர்கள் அமைதியாக ச.ம.க.வுக்கு மாறியிருக்கிறார்கள். தினசரி ஒரு போராட்டம் என்று அ.தி.மு.க. வினருக்கு ஜெயலலிதா வேலைத் திட்டம் கொடுத்தாலும், அவர் கட்சியின் கூட்டங்களில் இளைய தலைமுறை எண்ணிக்கை குறைந்து வருகிறது. எம்.ஜி.ஆர். கட்சியைத் துவக்கியபோது இணைந்தவர்கள், இன்று அறுபது வயதைத் தொடுகிறார்கள். இவையெல்லாம் தே.மு.தி.க. குறித்துப் பிற கட்சிகளை அச்சம் கொள்ளச் செய்திருக்கின்றன.

''தே.மு.தி.க.வில் என்ன கொள்கை இருக்கிறது இளைஞர்களை வசீகரிக்க'' என்பதுதான் பொதுவான குற்றச்சாட்டு. இதற்கு அதன் அவைத் தலைவர் பண்ருட்டி ராமச்சந்திரன் என்ன பதில் சொல்கிறார்:

''அரசியல் கட்சிகளின் நோக்கம், மக்களுடைய எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்து மகிழ்வாக வைத்திருப்பதுதானே? கேப்டன் ஆட்சிக்கு வந்தால், நமக்கு நல்லது நடக்குமென்று மக்கள் நம்புகிறார்கள். தி.மு.க.-அ.தி.மு.க. இலஞ்ச லாவண்ய, மக்கள் விரோத ஆட்சிகளைப் பார்த்துச் சலித்துப் போய்விட்டார்கள். எனவே, மாற்றத்தை உடனடியாக விரும்புகிறார்கள். குறிப்பாக இளைஞர்கள் கேப்டனால் மாற்றம் வருமென்று நம்புகிறார்கள். அதனால்தான், ஆயிரக்கணக்கானவர்கள் அவர் பின் அணி திரள்கின்றனர்'' என்கிறார் அவர்.

**''க**ட்சிப் பிடிப்போடு கொள்கையால் ஈர்க்கப்பட்ட இளைஞர்கள், என்றும் வேறு கட்சிகளுக்குத் தாவமாட்டார்கள். கட்சியில் நடவடிக்கை எடுக்கப்பட்டவர்கள், ஏதாவது கிடைக்குமா என்று எதிர்பார்த்து வந்து ஏமாந்தவர்கள் போன்றோர்தான் தாவி ஓடுகிறார்கள். கருணாநிதியை ஏற்றுக் கொள்ளாத, அவரது குடும்ப அரசியலை வெறுக்கின்ற மாபெரும் இளைஞர் கூட்டம், புரட்சித் தலைவியின் பின்னால்தான் இருக்கிறது. கடந்த எட்டாண்டுகளாக தமிழகம் முழுவதும் நான் பேசி வரும் கூட்டங்களில், நம்பிக்கையோடும், கொள்கைப் பிடிப்போடும் வலம்வருகிற ஆயிரக்கணக்கான இளைஞர்களைக் காண்கிறேன். சிலருக்கு மட்டுமே ஊடகங்கள் ஒத்துழைப்புத் தருவதால், செய்திகள் பெரிதாக ஊதிவிடப்படுகின்றன'' என்று சொல்கிறார் நமது எம்.ஜி.ஆர். கட்டுரையாளர் கோ.கலிவரதன்.

**இ**தற்கிடையில் தி.மு.க., கிராமம் தோறும் தளபதி மன்றங்களை அமைத்து,

இளைஞர்கள் சக்தியைத் திரட்டுவதில் ஈடுபட இருக்கிறது. பதினைந்திலிருந்து இருபது வயது வரை இருப்பவர்களைக் குறிவையுங்கள் என்று உள்ளூர் பிரமுகர்களிடம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஒன்றிய, வட்ட, நகர இளைஞரணி செயலாளரும் குறைந்தது வருடத்துக்கு இருபது கூட்டங்களையாவது தங்கள் பகுதியில் நடத்தவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறதாம். கட்சியில் சேரும் ஒவ்வோர் இளைஞனின் வீடு தேடிச் சென்று, அவனது தேவைகளை நிறைவேற்றவும் முயற்சி செய்ய வேண்டும் என்று பிரமுகர்கள் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள். கட்சியின் எதிர்கால நலனை உத்தேசித்து ஆட்சி அதிகாரம் இருக்கும்போதே பலப்படுத்திக் கொள்ளாவிட்டால், எதிர்காலம் கேள்விக் குறியாகி விடும் என்று கட்சிப் பிரமுகர்கள் எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

தி.மு.க.வும், அ.தி.மு.க.வும், பா.ம.க.வும் இவ்வாறு குறி வைத்துத் தாக்கும் அளவுக்கு வளர்ந்திருப்பதே விஜயகாந்தின் முதல் வெற்றி!

– ப்ரியன்



# பரத்தின் புது முடிவு!



* பழனியில்... பரத்

* பரத் முதல் முறையாக ஆக்‌ஷனில் கலக்கும் படம் பழனி. டைரக்டர் ஷக்தி சிதம்பரம் தயாரிக்க, பேரரசு இயக்குகிறார். 'திருப்பாச்சி'யில் அண்ணன் - தங்கை பாசத்தை அடிப்படையாக வைத்த பேரரசு, 'பழனி'யில் அக்கா - தம்பி உளவியலை அருமையாகக் கையாண்டிருக்கிறார். அக்கா குஷ்பு எக்ஸ்போர்ட் கம்பெனி முதலாளியாக நடிக்க, கார் டிரைவராக வருகிறார் தம்பி பரத்.

* ஹீரோயினாக அறிமுகமாகிறார் காஜல் அகர்வால். இதில் இவருக்கு சேல்ஸ்கேர்ள் வேடம். 'பழனி'யின் கதைக்களம் சென்னை தான் என்றாலும் ஃப்ளாஷ்பேக் காட்சிகள் பழனியில் படமாகி இருக்கின்றன. படத்தில் மொத்தம் ஆறு பாடல்கள். அனைத்தையும் இயக்குநர் பேரரசே எழுதியிருக்கிறார்.

* தமது எல்லாப் படங்களையும் போல் 'பழனி'யிலும் பஞ்ச் டயலாக்குகளுக்குப் பஞ்சமில்லாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார் பேரரசு. 'நீ வெட்டிச் சாய்க்கறதுக்கு நான் இளநி இல்லடா, பழனி', 'வேண்டினவனுக்குத் துணை; சீண்டினவனுக்கு வினை' என்று பரத் பட்டையைக் கிளப்பியிருக்கிறார்.

* பேரரசுவின் படங்களிலேயே க்ளைமாக்ஸுக்காக அதிக நாட்கள் எடுத்துக் கொண்ட படம் 'பழனி'தான். எண்ணூரில் உள்ள ஃபேக்டரி ஒன்றில் மிக அதிக பட்சமாக பன்னிரண்டு நாட்கள் படம் பிடித்திருக்கிறார்கள். ரிஸ்க்கான பல ஃபைட்டுகள் படத்தின் ஹைலைட் என்கிறார் பேரரசு.

* கிராஃபிக்ஸும் 'பழனி'யில் முக்கிய பங்கு வகிக்கிறது. மொத்தம் இரண்டரை மணி நேரப் படத்தில், ஒரு மணி நேரம் கிராஃபிக்ஸ் இடம்பெறுகிறது. இந்தப் படத்துக்குப் பிறகு பரத் ஆக்‌ஷன் ஹீரோவாகத் தொடரத் திட்டமிட்டிருக்கிறார். அதே நேரத்தில் ரொமான்ஸ், காமெடி என்கிற கமர்ஷியல் பஞ்சாமிர்தத்தையும் அவர் கைவிடுவதாயில்லை.

# வடிவேலுவின் அடுத்த கட்டம்!

இந்தியாவிலேயே மிக அதிக பொருட்செலவில் தயாராகும் காமெடிப் படம் 'இந்திரலோகத்தில் நா.அழகப்பன்'. இம்சை அரசனுக்குப் பிறகு வடிவேலு கதாநாயகனாக மூன்று வேடங்களில் நடிக்கிறார். நாடக சபா நடிகரான அழகப்பன் (வடிவேலு), இந்திரலோகத்துக்கும் எமலோகத்துக்கும் செல்ல நேரிட, திரும்பிய பின் நடக்கும் விஷயங்களை சிரிக்கச் சிரிக்கச் சொல்லியிருக்கிறார்கள்.

★ செவன்த் சேனல் மாணிக்கம் நாராயணன் பணத்தைத் தண்ணீராக அல்ல கடல் நீராகச் செலவழித்து, படத்தைத் தயாரித்து வருகிறார். இந்திரலோகம், எமலோகம் என்று படம் முழுக்க செட்டுகளாகப் போட்டு அசத்தியுள்ளார் தோட்டாதரணி.

★ ஒரு பாடலுக்கு ஸ்ரேயா வடிவேலுவுடன் நடனமாடியுள்ளார். இப்பாடல் படமான போது வடிவேலு நடிப்பில் ஸ்ரேயாவும், ஸ்ரேயா நடிப்பில் வடிவேலுவும் மயங்கி பலமுறை ரீடேக் வாங்கியிருக்கிறார்கள். ஒரு வழியாக ஐந்தரை நாட்களில் முடிந்த பாடல், அற்புதமாக வந்திருக்கிறதாம்.

★ நாசர் நாரதராக வர, சித்திர குப்தனாக படத்தின் இயக்குநர் தம்பி இராமையா நடித்திருக்கிறார். நாயகி நீதாஷர்மா கன்னடப் புது வரவு. வடிவேலு அறிமுகமாகும் 'மாசத்தில் ஒரு நாள் குளிப்பவன்' பாடலை குற்றால மலைகளில் படமாக்கியபோது, அங்கே விளையாடிக் கொண்டிருந்த இருபது விடலைப் பையன்கள், மறைந்திருந்து பாடலைத் திருப்பி கோரஸாகப் பாடியிருக்கிறார்கள். யாரென்று கண்டுபிடித்து, அவர்கள் வடிவேலுவோடு காமெடியாக மல்லுக்கட்ட, ஷூட்டிங் ஸ்பாட்டே கலகலத்துப் போயிருக்கிறது.

★ 'சிரிப்புப் படம் என்று வெறுமனே இதனை ஒதுக்கி விட முடியாது. கூட்டுக் குடும்பத்தின் அவசியத்தையும் வலியுறுத்தியுள்ளேன்' என்று கூறுகிறார் இயக்குநர் தம்பி இராமையா.

– சுந்தரி



## நீங்கள் கேட்டவை தராசு

● கே.துர்கா, சென்னை - 11

? மலேஷியாவில் தமிழர்களின் நிலை சரியில்லாதபோது, நட்சத்திரங்கள் அங்கே கலைநிகழ்ச்சி நடத்தப்போவது சரியா?

! சந்தர்ப்பம் சரியில்லாதபோது கலைநிகழ்ச்சியை ஒத்திப்போட்டிருந்தால் நட்சத்திரங்கள் இன்னும் ஜொலித்திருக்கும்.

● கன்னிக்கோவில் ராஜா, சென்னை

? இந்தியாவிலும் துப்பாக்கிச் சூடு கலாசாரம் காலூன்றுகிறதே? (டெல்லி மாணவன் சுட்டுக் கொலை)

! வீட்டிலே பெற்றோர் துப்பாக்கி வைத்துக்கொள்ளும் அளவுக்கு விரோதங்களை வளர்த்துக்கொள்ளாமல் இருப்பது நல்லது. அப்படியே வைத்துக்கொண்டாலும் குழந்தைகள் கைக்கு எட்டாதபடி பாதுகாப்பாக இருந்திருக்க வேண்டாமா? டி.வி., சினிமா போன்றவற்றால் குழந்தைகள் மனநலம் பாதிக்கப்படாதவாறு வளர்ப்பது எல்லாவற்றையும் விட முக்கியமல்லவா? ஊடகங்களின் போக்கை நம்மால் கட்டுப்படுத்த முடியாதபோது, பெற்றோரின் பொறுப்புதானே பல மடங்காகிறது!

● ப.ராமகிருஷ்ணன், காயக்காடு

? கருணாநிதி ஸ்டாலின் இருவரின் வயதைக் குறிக்கும் வகையில் 84, 55 பவுனில் இருவருக்கும் சிலை வடித்து, கட்சியினர் பரிசளித்துள்ளது...?

! அன்பின் மிகுதியால் இதுபோன்ற அறியாமைகளில் தொண்டர்கள் ஈடுபடுகிறபோது, அதனைத் தலைவர்கள் ஊக்குவிக்கக்கூடாது. அவர்கள் ஆடம்பரத்தை ஏற்றால், தொண்டர்கள் மத்தியிலும் பேராசை வளரும்.

● செந்தில் விஜயலக்ஷ்மி, பேராவூரணி

? இடம், பொருள், ஏவல் என்றால் என்ன?

! அரசியல், லஞ்சம், ஊழல்!

● டி.எம்.பானுமதி, சென்னை

? ஒரு மாநாட்டுக்கு இந்த அளவு ஆடம்பரமும் விளம்பர



* ரயில்வே ஜாதகம்!

* ஒப்புநோக்க இளமை!

# ஒரு மாநாட்டுக்கு இத்தனை ஆடம்பரம் தேவையா?

அப்போதுதான் நாம் தார்மிகப் பலத்துடன் பிற நாடுகளிடம் வாதாட முடியும்.

● பா.சு.மணிவண்ணன், திருப்பூர்

**? 'மின் தடை ஏன்?' என்று கேட்டால் சென்ற அ.தி.மு.க. ஆட்சியைக் குறை கூறுகிறாரே ஆர்க்காடு வீராசாமி?**

! நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு என்பார்கள். இவரோ, 'முன்னால் சென்ற குதிரை சறுக்கி விழுந்ததால் நான் நொண்டுகிறேன்' என்கிறார்!

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? பா.ஜ.க.வின் பிரதமர் வேட்பாளராக அத்வானியை அக்கட்சி அறிவித்துள்ளதே?**

! 'இந்தியா ஒளிர்கிறது' வாசகம் தவறு; 'இந்தியா எழுகிறது' என்று இருந்திருக்க வேண்டும் என முதல் முத்தை உதிர்த்து, பளிச்சென்று தலைமைப் பண்பைப் பதிவு செய்துள்ளாரே! இதுபோன்ற புத்திசாலித்தனத்தை வேறு பல அம்சங்களிலும் காட்டினால், வேட்பாளர் என்ற அடைமொழி அகல வாய்ப்பிருக்கிறது.

● பெயர், ஊர் குறிப்பிட விரும்பாத வாசகர்

**? மன நோயாளிகளைக் கவனித்து, அவர்களுக்கு உணவு, மருத்துவம் இருப்பிடம் தரும் தன்னார்வ தொண்டு நிறுவனங்கள் ஏதேனும் இருக்கின்றனவா?**

! இருக்கிறது நண்பரே! சென்னையில் 'பானியன்' அமைப்பு இருக்கிறது. ஆனால், வேறு ஆதரவே இல்லாதவர்களை மட்டுமே ஏற்று அர



✱ அகம்பாவ குரூரம்!

...மும் உழைப்பும் செலவும் தேவைதானா?

! பிரமிக்க வைப்பதன் மூலம் மக்களைக் கவர்ந்துவிடலாம் என்ற போக்கு, இன்று பல துறைகளில் காணப்படுகிறது. தி.மு.க. அரசியல் இதற்கு விதிவிலக்கல்ல. மாநாட்டின் சாதனை அத்துடன் முடிந்துபோனதுதான் வருத்தம்.

● ப.காளிதாசன், வேட்டனூர் ❐

**? மலேசியாவில் அல்லல்படும் தமிழர்களுக்கு இந்தியாவில் நல்வாழ்வு அளிக்கச் சாத்தியப்படுமா (ஒரு நப்பாசைதான்)...?**

! சாத்தியப்படாது. ஆனால், மலேசிய அரசின் 'மண்ணின் மைந்தர்களுக்கே முதலிடம்' என்கிற கொள்கை கைவிடப்பட வேண்டும் என்று, இந்திய அரசு நட்பு முறையில் பேச்சுவார்த்தை நடத்தி வற்புறுத்தமுடியும். இதற்கு முன்னதாக, நம் நாட்டிலேயே தலையெடுத்துள்ள இந்தப் போக்குக்கு நாம் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்.



✱ தலைமைப் பண்பு!

வணைக்கிறது.

● எஸ்.சிங்கர், திருப்பரங் குன்றம்

**? இதுவரை தமிழக அர சால் வழங்கப்பட்ட இலவச தொலைக்காட்சிப் பெட்டி களைப் பெற்றுக் கொண்டோ ரின் பெயர், முகவரியை வெளியிட வேண்டும் என்று விஜயகாந்த் கேட்கிறாரே? நடைமுறை சாத்தியமா?**

! டி.வி. கொடுப்பது சாத் தியம் என்கிறபோது, பெற்றுக் கொண்டவர்கள் பட்டியல் வெளியிடுவது ஏன் சாத்திய மில்லை. தகவல் பெறும் உரிமை சட்டம் எதற்கு இருக் கிறது?



★ உரிமைச் சட்டம்!



★ சறுக்கிய சாக்கு!

● ஆர்.தங்கராஜ், திருப்பூர்

**? மலம் அள்ளினால் யோக நிலை பெறலாம் என்கிறாரே நரேந்திர மோடி?**

! அகம்பாவத்தினால் விளையும் குரூரம்.

● என்.வி.ரமணி, சென்னை - 92 ★

**? மகாகவி பாரதியின் பாடல்களை முழுவதும் படித்தால், அவர் ஆன்மிக சிந்தனையில் பலவற்றை அமைத்திருந் தாலும், ஒரு சில முரண்பாடான பாடல் களையும் இயற்றியிருப்பது ஏன் என்று புரியவில்லை..?**

! தீக்குள் விரலை வைத்தால் கண்ண னைத் தீண்டும் இன்பத்தை அனுபவிக்கக் கூடியவர், ஆன்மிகத்தின் உயர்நிலையில் இருந்தபடி அனைத்தையும் சமமாகக் காண்பார். அத்தகைய உயர் நிலையை எட்டமுடியாத நமக்கு, முரண்பாடாகத் தோன்றுமே ஒழிய முரண்பாடு அல்ல.

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
**ப.காளிதாசன், வேட்டனூர்**

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**என்.சி.ரமணி, சென்னை - 92**

● வே.ந.கதிர்வேல், வேலூர் - 6

**? "அத்வானியின் ஜாதகப் படி அவர் ஒரு நாளும் பிர தமர் ஆக முடியாது" என் கிறாரே ரயில்வே அமைச்சர் லாலு?**

! இந்திய ரயில்வேயின் ஜாதகப்படி நஷ்டமன்றி வேறில்லை என்றுதான் சில ஆண்டுகளுக்கு முன்பு வரை நிலைமை இருந்தது!

● எஸ்.ஆறுமுகம், கழுகு மலை

**? நெல்லையில் தி.மு.க. இளைஞர் அணி மாநாடு ஐம் பது வயதைத் தாண்டிய ஸ்டா லினை வைத்து நடத்துவதேன்?**

! இளைஞர்களில் அவர் மூத்தவர் என்று வைச்சுக்கோங்கப்பா! பின்னே, 85-ல் கருணாநிதியா வந்து துவக்கமுடியும்! அவரை நோக்க, இவர் இளைஞர்தானே!

● ரேவதிப்ரியன், ஈரோடு

**? உறுப்பினர்கள் இல்லாததால், நாடாளுமன்றத்தின் ஒரு நாள் கூட்டம் ஒத்தி வைக்கும் நிலைக்கு வந்துவிட் டதே!**

! அதிகாரபூர்வமான வரிப்பண விரயம். வந்துகூடினால் மட்டும் என்ன சாதிக் கிறார்கள் என்பது வேறு விஷயம்!

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப் பட்டி

**? எது வேதனையானது தராசு?**

! அஸ்ஸாமில் 'பழங்குடியினர் விடு தலை இயக்கம்' என ஆரம்பிக்கப்பட்டு வன்முறை நடவடிக்கைகளில் இறங்கி யிருப்பது. அவர்கள் வைத்த குண்டு, ராஜதானி எக்ஸ்பிரஸை விபத்துக்குள் ளாக்கி, பல உயிர்களைப் பலிகொண்டது. எந்தப் பிரச்னையையும் வன்முறை வெடித்த பிறகுதான் கவனிப்பது என்கிற போக்கு ஆபத்தானது. ●

சத்தியம் - சிவம் - சுந்தரம்

# கொரட்டூர் பிராமண அந்திம ஸம்ஸ்கார ஸஹாய ஸமிதி

(Regd. No. 1761 / 2006)

59/4, Triveni Flats, Rukmani Ammal Street, Korattur, Chennai - 600 080 ☎ : 26257554

## உதவிக்கரம் நீட்டும் நல் உள்ளங்களுக்கு ஓர் வேண்டுகோள்

சமூகத்தில் சீரிய முறையில் அந்திம ஸம்ஸ்காரம் செய்வதற்கு பொருளாதாரத்தில் மிகவும் கஷ்ட நிலையில் உள்ள குடும்பத்தினருக்கு, அந்த நேரத்தில் சிறிதேனும் உதவி செய்யவேண்டும் என்பதை பிரதான நோக்கமாகக்கொண்டு, இந்த ஸமிதி சேர்மேன், செயலாளர், பொருளாளர் மற்றும் டிரஸ்டிகளுடன் தொடங்கப்பட்டு, கடந்த ஓராண்டு காலமாக கொரட்டூரில் இயங்கி வருகிறது.

'பலர் உதவ நிதி உயரும்    நிதி உயர பணி தொடரும்
பணி தொடர பலன் பெருகும்    பலன் பெருக நலன் பெருகும்'

இந்த அரும்பணியை நாங்கள் தொடர, தாங்கள் தங்களால் இயன்ற பொருளுதவியைச் செய்யுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். தம் இதயத்தில் உருவாகும் பிறருக்கு உதவவேண்டும் என்னும் உணர்வுக்கு உயிர் கொடுக்க விரும்பும் உத்தம உள்ளம் படைத்தோர் தம் உருகும் நல் உணர்வுகளை உதவிகளாக மாற்றி புண்ணியம் பெறலாம்.

தனித்து இருப்பது நார்    அதனால் பயனேதும் இல்லை
சில நார்கள் சேர்ந்தால் கயிறு    கட்டுவதற்கு உதவும்
கயிறுகள் சில சேர்ந்தால் தாம்பு    கிணற்று நீரை எடுக்க உதவும்
தாம்புகள் சில சேர்ந்தால் வடம்    பெரிய தேரினை இழுக்க உதவும்

நார் போன்று தனித்தில்லாமல், வடம் போன்று பலரும் ஒன்றிணைந்து, ஸமிதியின் குறிக்கோள் என்னும் தேரினை பாரினில் பவனி வர செய்குவோம்.

இந்த கலியுகத்தில் நம்மால் முடியும் காலங்களில் எல்லாம் நாம் செய்யும் புண்ணியச் செயல்கள் நமக்கு முடியாத கஷ்ட காலங்களில் எதிர்பாராத உதவியாக வந்து நம்மை காக்கும். தாங்கள் அனுப்பும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்.

நன்கொடைகளை காசோலை அல்லது வரைவோலை (Demand Draft) மூலமாக 'KORATTUR BRAHMIN ANTHIMA SAMSKARA SAHAYA SAMITHI' என்ற பெயரில் மேலே குறிப்பிட்ட முகவரிக்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம்.



# கல்கி



2007 டிசம்பர் 30
சர்வஜித் மார்கழி 14
மலர் : 66
இதழ் : 22

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## மிரட்டப்படும் நீதிபதிகள்!

**க**டந்த டிசம்பர் 17 அன்று தினமணி நாளிதழ் தலையங்கம் அதிர்ச்சி தரும் தகவலை வெளிப்படுத்தியிருக்கிறது.

ஹோட்டல் சரவண பவன் அதிபர் ராஜகோபால் பேரில் தொடரப்பட்ட கொலை வழக்கில் அவருக்குப் பத்தாண்டு காலம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. செஷன்ஸ் நீதிமன்றம் விதித்த இத்தீர்ப்பை எதிர்த்து ராஜகோபால் சென்னை உயர்நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்திருக்கிறார். வழக்கு நிலுவையில் இருக்க, அவர் ஜாமீனில் விடுவிக்கப்பட்டுவிட்டார். ஆனால், வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படாமலே காலம் கடத்தப்பட்டு வருகிறது. இதற்குக் காரணம், இவ்வழக்கை விசாரிக்க எடுத்துக்கொள்ளும் நீதிபதிகளுக்கு அடுத்தடுத்து மிரட்டல்கள் வருகின்றன என்பதுதான்!

இதனைச் சுட்டிக் காட்டியதுடன், பத்திரிகைகள் இந்தச் செய்திக்கு முக்கியத்துவம் கொடுத்துச் சரிவர வெளியிடாமல் மெத்தனமாக இருந்து வரும் போக்கையும் வருத்தத்துடன் கண்டிக்கிறது தினமணி தலையங்கம்.

நீதிபதிகள் டி.முருகேசன், கே.என்.பாஷா ஆகியோர் முதலில் இவ்வழக்கை விசாரிக்க மறுக்க, அடுத்து நீதிபதிகள் பி.டி.தினகரன், ரகுபதி ஆகியோரும் மறுக்க, மீண்டும் நீதிபதிகள் டி.முருகேசன், பெரிய கருப்பையா முன்னிலையில் இவ்வழக்கு விசாரணைக்கு வந்திருக்கிறது.

மிகுந்த தயக்கத்துடன் இப்பொறுப்பை ஏற்றதாகவும் அதன் பிறகு தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் மிரட்டல்கள் வருவதாகவும் தலைமை நீதிபதியிடம் தெரிவித்துவிட்டு, பொறுப்பை வேறு யாரிடமேனும் தரும்படி கூறியுள்ளனர் நீதிபதிகள் டி.முருகேசன், பெரிய கருப்பையா.

நீதிபதிகள் சுதந்திரமாகத் தங்கள் பொறுப்பை நிறைவேற்ற இயலாத









அளவுக்கு தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு பாழாகிவிட்டது. சட்டத்தின் ஆட்சியை முடக்கும் அளவுக்கு சமூக விரோத சக்திகள் இயங்குகின்றன. அதிகார வர்க்கத்தின் துணை அல்லது மௌனமான ஆதரவு இல்லாமல் இது சாத்தியமில்லை.

காவல் துறையினர் இதுபோன்ற வழக்குகளை நடத்தி முடிக்க முனைப்புடன் ஒத்துழைத்து, வெற்றி கண்டு, தங்கள் துறைக்குப் பெருமிதமும் நற்பெயரும் தேடிக்கொண்ட காலம் மலையேறிவிட்டது!

பல வழக்குகளில் (வரதட்சணைக் கொலை, பாலியல் பலாத்காரம் போன்றவை) அரசு தரப்பு மேல் முறையீடுக்கே செல்லாததால் நீதி மறுக்கப்பட்டு, எத்தனையோ தனி நபர்கள் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். இது வடிகட்டிய அசிரத்தை எனில், குற்றம் சாட்டப்பட்ட நபரின் செல்வாக்கும் இணைகிறபோது, காவல் துறையும் அதிகார வர்க்கமும் வளைந்து கொடுத்து, அநீதிக்குத் துணை போவது அக்கிரமம்.

இதுபோன்ற தருணங்களில் நீதித்துறை அஞ்சாநெஞ்சுடன் செயல்பட வேண்டும்! பதிவான வழக்குகள் - குறிப்பாக, லஞ்ச ஊழல், கிரிமினல் மற்றும் மோசடி வழக்குகளை விரைவில் விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் பொறுப்பு நீதிபதிகளுக்கும் இருக்கிறது.

ஒரு வழக்கை விசாரிக்க மறுக்கும் உரிமை, சட்டரீதியாக ஒரு நீதிபதிக்கு இருக்கலாம். ஆனால், அவ்வாறு மறுப்பது எவ்வாறு நியாயமாகும்?

உயிருக்கு அபாயமோ, அச்சுறுத்தலோ ஏற்பட்டால், அதை பகிரங்கப்படுத்தி அரசிடம் தமக்கும் தமது குடும்பத்துக்கும் கூடுதல் பாதுகாப்புக் கோரி வழக்கைத் தொடர்ந்து நடத்துகிற மனோபலமும் கடமையுணர்வும் நீதிபதிகளுக்கு இருக்க வேண்டும்.

மாறாக, மிரட்டல்களுக்குப் பணிந்து, அவர்கள் பின்வாங்க ஆரம்பித்தால், சமூக விரோத சக்திகளின் கைதான் ஓங்கும். யார் எதற்கு வழக்கு தொடுத்தாலும் தாதாக்களைக் கொண்டு நீதிபதிகளை மிரட்டி, வழக்கு நடைபெறாமல் செய்து, குற்றங்களைத் தொடரலாம் என்கிற போக்கு வளர்ந்து நிலை பெற்றுவிடும்.

இவ்விஷயத்தில் வழக்கை நடத்தி முடிக்கும் பொறுப்பு அரசு வழக்குரைஞர்களுக்கும் காவல்துறைக்கும் எந்த அளவு இருக்கிறதோ, அந்த அளவுக்கு நீதிபதிகளுக்கும் உண்டு. ●

# புத்தக விமர்சனம்

● **பாரதத்தின் பக்த கவிகள் - மு.ஸ்ரீனிவாசன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 02. விலை ரூ.70**

நம் தேசத்தின் புகழ்பெற்ற பக்த கவிகள் முப்பது பேரின் வாழ்க்கையும் பாடல்களும் அடங்கிய கட்டுரைகளின் தொகுப்பு. இவர்களின் வாழ்வில் நடந்த ஆச்சரியமான சம்பவங்கள், அவர்கள் எழுதிய பாமாலைகள், பாடல் வல்லமை போன்றவற்றைச் சொல்கிறது. தமிழ் நாட்டுக்கு வெளியே வாழ்ந்த மகான்களை இந்நூல் மூலம் நமக்கு அறிமுகப்படுத்துகிறார் நூலாசிரியர்.

## நாகரிகம் வழுவாத நகைச்சுவை!

● **வாழ்க்கை ஒரு சாகசம் - சாதியுங்கள்! - நீதியரசர் எம்.கற்பக விநாயகம், வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.100**

ஜார்கண்ட் மாநில உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி கற்பக விநாயகம் நிகழ்த்திய பதினாறு பேருரைகள் அடங்கிய நூல். படிப்போரை உயர்த்த வல்ல, இலக்கிய தரத்துக்கு எடுத்துச்செல்லும் தமது சொற் பொழிவுகளை நூல் வடிவில் வெளியிட்டுள்ளார். பேச்சில் ஆழம், நாகரிகம் வழுவாத நகைச்சுவை, மனத்தில் பதியும் குட்டிக்கதைகள் என, இவரது சொற்பொழிவுகளின் நீதி போதனைக்கு நூல் வடிவம் தரப்பட்டுள்ளது.



● **அகில இந்திய உலாவும் அமெரிக்கப் பயணமும் - ஆரல்.இரா.நடராசன், வசந்தம் பதிப்பகம், 419 E, மலர் குடியிருப்பு, 19வது பிரதான சாலை, அண்ணா நகர் மேற்கு, சென்னை - 40. விலை ரூ.75**

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் அமைப்பு, கலாசாரம், இந்திய நாகரிகத்தின் தொன்மை, உயர்வு ஆகியவற்றுடன், தாம் பார்த்த இடங்கள், சந்தித்த மனிதர்கள், தமக்கேற்பட்ட அனுபவ உணர்வுகள், நண்பர்களோடும் குடும்பத்தோடும் நிகழ்த்திய உரையாடல்கள் என, தமது முதல் வெளிநாட்டுப் பயணத்தைச் சுவையாகச் சொல்லியிருக்கிறார் நூலாசிரியர்.

● **சிந்தனைப் பூச்செண்டு - கார்முகிலோன், உரத்த சிந்தனை பதிப்பகம், 3, தணிகாசல முதலி தெரு, பெரம்பூர், சென்னை - 11. விலை.30**

விடுதலை, தன்னம்பிக்கை, அன்பு மற்றும் சமூக நிலைகள் பற்றிய தமது சிந்தனைகளைப் பூச்செண்டாகக் கலந்துகட்டிக் கவிதைகள் பல வடித்துள்ளார். எழுத்துக்கப் பிழைகளைத் தவிர்த்திருக்கலாம்.

**- மித்ரா**

## 23.12.07 முதல் 29.12.07 வரை

**மேஷம்:** பொருளாதார சிரமம் இருக்காது. கல்வி வளம் மேலோங்கும். குடும்ப வாழ்வு ஒற்றுமையாக இருக்கும். குழந்தைகளால் மனச் சந்தோஷம் கிட்டும். திருமணம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு கிட்டும். நீண்ட கால கடன் தொல்லை தீரும். சத்ரு தொல்லை இருக்காது. ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் அதிகரிக்கும்.

**ரிஷபம்:** மனநிறைவான வாரம். உடல் ஆரோக்கியம் சீராகும். வேலைப் பளு குறையும். வழக்கு வெற்றி பெறும். பணக் கஷ்டம் வராது. மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். தாயின் உடல்நிலையில் முன்னேற்றம் காண்பிக்கும். கடன் சுமை தீரும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** ரொம்பவும் மகிழ்ச்சிகரமான வாரம். தனம், வாக்கு, கல்வி... மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். பண வசதி பெருகும். வேலையில் நற்பெயர் ஏற்படும். வெளி நாட்டு அழைப்பு வந்து சேரும். மனச் சஞ்சலம் தீரும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் கிட்டும். பரிகாரம் தேவை இல்லை.

**கடகம்:** வாகனங்களில் செல்லும் போது உஷார். இல்லற வாழ்வில் கணவன் - மனைவிக்குள் விட்டுக்கொடுத்து நடந்து கொள்வது நல்லது. திருமணம் சற்றுத் தாமதம் ஆகும். மறைமுக சத்ரு தொல்லை இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ரெடி. மனைவி, குழந்தைகளை விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** குழப்பம் விலகி, மனம் மகிழ்ச்சி பெறும் வாரம். சுப காரியப் பேச்சு வார்த்தை நல்ல பலனை அளிக்கும். கடன் தொல்லை நீங்கும். கல்வி வளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. மகப்பேறு பாக்கியம் ஏற்படும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். நண்பர் உறவினர்கள் மூலம் ஆதாயம் ஏற்படும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். திருமணம் கைகூடும். ராகு / கேது/ சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** மனநிறைவான வாரம். வேலை மாற்றம் ஏற்படும். மனச் சலனம் தீரும். இல்லறவாழ்வு நன்றாக இருக்கும். சொத்து

# தஞ்சை பரத்வாஜ்

சேரும். பணக் கஷ்டம் வராது. தொழில் துறையில் நல்ல ஆதாயம் கிட்டும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். சத்ரு தொல்லை ஒழியும். வீடு மாற்றம் செய்ய வேண்டி வரும். கடன் தொல்லை தீரும். வாகன யோகம் கிட்டும். சனி / குரு / வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். வீடு / மனை வழியில் ஆதாயம் கிட்டும். நெருங்கிய நண்பர்களை விட்டுப் பிரிய நேரிடும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். எதிர்ப்புகள் விலகும். திருமணக் காரியம் கைகூடும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் உண்டாகும். உடன் பிறப்பு வழியில் நற்பலன் மனச் சஞ்சலம் தீரும். ராகு / கேது / குரு / வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

கிட்டும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கல் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. கல்வியில் அதிக கவனம் தேவை. நெருங்கிய நண்பர்களை விட்டுப் பிரிய நேரிடும். திருமணம் சற்றுத் தாமதம் ஆகும். வழக்குகள் காலதாமதம் ஆகும். மனைவி, குழந்தைகளை விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். தொழில்துறையில் வேலைப் பளு அதிகரிக்கும். ராகு / கேது/ சனி / குரு வழிபாடு செய்து வர சங்கடங்கள் தீரும்.

**கும்பம்:** மனக் குழப்பம் தீரும். பண வசதி பெருகும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். கடன் சுமை குறையும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**விருச்சிகம்:** பண வசதி பெருகும். தொட்டது எல்லாம் பொன்னாகும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சொத்துக்கள் வாங்க நல்ல தருணம். வேலைப் பளு அதிகரிக்கும். மனக் கவலை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தைகள் மூலம் மனச்சந்தோஷம் ஏற்படும். ராகு / கேது/ சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** சுபச் செலவு ரெடி. பணக்கஷ்டம் இருக்காது. கல்வி வளம் நன்றாக இருக்கும். பொருளாதாரம் பெருகும். வீடு / மனை வாங்க நல்ல நேரம். வராத நிலுவைகள் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வழக்கு வெற்றி பெறும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் வீடு / மனை வாங்க நல்ல தருணம். கணவன் - மனைவிக்குள் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். சத்ரு தொல்லை தீரும். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் உண்டாகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** வேலை மாற்றம் ஏற்படும். மனச் சஞ்சலம் தீரும். ஊதிய உயர்வு ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். மேல்நாட்டு அழைப்பு வந்து சேரும். தொழில் துறையில் நல்ல வளர்ச்சி ஏற்படும். பணக் கஷ்டம் இருக்காது. வீடு மாற்றம் உண்டாகும். நாணயம் காப்பாற்றப்படும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும். ●

# செவக்காட்டுச் சித்திரங்கள் 8

கருப்பசாமியின் கையில் பண்ணரிவாள். வாயில் வியாபாரிக்கு வசவு. ''ஏலேய், ஏந்துட்ட எடுத்தவன் எவனாயிருந்தாலும் குடுத்திருங்க. நான் பிடிச்சிட்டமின்னா பங்கரக் கொத்தாக் கொத்திருவேன். ஒழுங்கு மருவாதியா எடுத்த எடத்துல வெச்சிட்டு அருவப்படாம வந்திருங்க; விட்ருதேன். இல்லைன்னா வெட்டுத்தாம்ல.'' இப்படிச் சொல்லிக்கிட்டே தெரு முக்குக்கிட்ட நின்ன கரண்டு போலுலப் போட்டு வெட்டுதான். வெட்டுன வெட்டுல கொஞ்சம் சிமிண்டு தான் வந்தது. வேற ஒண்ணுமில்ல. பண்ணருவாள வச்சு புல்லறுக்கலாம்; ஆள்ள வெட்ட முடியுமா?

ஆனா, அருவாளால ஆதாயம் இல்ல. வைத வசவுக்கு ஒரு பிரயோசனமாய் நாலு ஆளுக கூடிட்டாங்க. இவனும் வாய்க்கு வந்தபடியெல்லாம் வசவு உரிக்கான். என்ன சங்கதின்னா, கருப்பசாமி மாடுமேய்க்கான். தெனம் தெனம் மாடு அவுக்கும் போது அவனுக்கு வாங்கித் திங்க அவுக அய்யா இருவத்தஞ்சு காசு தருவாரு. ஒண்ணு அதுக்கு என்ன மாச்சும் வாங்கித் திங்கணும். இல்ல வீட்டுல பத்திரமாச் சேந்து வெச்சிருக்கணும். இவன் என்னன்னா மாடு மேய்க்கிற காட்ல செருவாடு சேர்த்திருக்கான். எப்படின்னா ஒரு சருவத்தாள்ல நாலணாவைப் போட்டு நல்லா அடர்ந்த இலந்தம் புதருக்கடியிலே தெனம் துட்டக் கொண்டி வெச்சுருக்கான். இதுல இருந்தே அவன் எப்பேர்ப்பட்ட கூறுகாரன்னு தெரிஞ்சிக்கிடலாம். காட்டுல லாந்துதவன் எத்தனை பேரு? எவனோ ஒருத்தன் 'புதையல்' எடுத்திட்டான். இதைக் கோட்டிக்காரக் கழுதை தெருவுல வந்து கூப்பாடு போட்டா, எடுத்தவன் குடுப்பானா?

பொதுவாகவே கருப்பசாமி கூறு கெட்ட பயல். அவன் மாடு மேய்க்கப் போனதுக்கே அவந்தான் காரணம். அவுக அப்பா அவனைப் படிக்கத்தான் போட்டாரு. இவன் என்ன செஞ்சான்னா, பள்ளிக்கூடம் போகாம, காடு கரம்பையில கத்திக்கிட்டு இருப்பான். கரட்டான் அடிக்கது, கொடிக்காய், இலந்தைப்



பழம் பொறுக்கித் திங்க, சம்மணம் போட்டமானிக்கே கிணத்துல விழுந்து குளிக்கன்னே திரிஞ்சுட்டிருப்பான்.

கருப்பசாமியப் பத்தி எவ்வளவுதான் எளக்காரமாப் பேசினாலும், அவனை

# வே. இராமசாமி

# போல் திலி!

மாதிரி நல்ல மாட்டுக்காரன் எவனையும் ஊர்ல பாக்க முடியாது. எருமைக் கிடேரி மேல அவன் சப்பரம் ஏறிப்போனான்னா ராசாக்கமாருகூடத் தோத்துப் போவாங்க. என்னன்னா அடிக்கடி ஏதாவது (சண்டை) இழுத்துருவான். எப்பமும் எதுனாச்சும் அவனப் பத்தி 'நியூஸ்' வந்துக்கிட்டே இருக்கும்.

ஒரு தீபாவளி அன்னிக்கு அவன் செஞ்ச கூத்து இருக்கே, சொன்னா சிரிச்சு வயித்துவலி வந்திரும். எப்படியோ ஓர் அணுகுண்டு வேட்டை வாங்கிட்டான். வெடிச்சுப் பாத்தா வெடிக்கல. தெருவுல எல்லாரும் டமால் டுமீல்னு வேட்டுப் போடுதாங்க. ஒருத்தன் தேங்காச் செரட்டைல ஒரு கண்ணைத் தோண்டி, அதுக்குள்ள வெடித் திரியவிட்டுப் பத்த வெச்சான். வேட்டு வெடிச்சச் சிரட்டை சுக்கு நூறாயிருச்சு. இன்னொருத்தன் வெத்துப் பாட்டில்ல போட்டு வெடிக்க, பாட்டில் தூள்தூளாப் பறக்கு.

கருப்பசாமிக்கு மட்டும் அணுகுண்டு வெடிக் கலை. பயலுக்கு பஸக்னு போயிருச்சு. 'ஏ புஸ்க் புஸ்க்'னு நக்கல் பண்ணுதாங்க. சரி வீட்ல போயி ரெண்டு தோசையைத் திம்போம். இன்னிக்கு விட்டா இனிமே இட்லி, தோசை தைப் பொங்கலுக்குத் தான் கிடைக்கும்னு சாப்பிட தம்பளத்தை (தட்டு) எடுத்து அடுப்பு முன்னால உட்காந்தான். தோசை சுட்டுக்கிட்டிருந்த அவுக அம்மா, இவன் தட்ல போடாம அது பாட்டுக்குச் சுட்டுச்சுட்டு, சின்னக் கடாப் பெட்டியில அடுக்குதா. 'போயி கைகால கழுவிட்டு வந்து தின்னு'ன்னு அம்மா சொன்னது ஒரு குத்தமா? கோவத்துல அணுகுண்டை எடுத்து அடுப்புல போட்டுட்டு வீட்டுப் படிலகூடக் கால் வெக்காம ஒரே கெலியா கெலிச்சு ஓடிட்டான்.

அம்புட்டுத்தான், வேட்டு வெடிச்சுத் தோசைக் கல்லு ரெண்டாப் பறக்குது ஆடிக்காத்துல ஒடு பறந்த மாதிரி. தீக்கங்கள்ளி அவன் தம்பிமேல போட்ருச்சு. தவுல் அடிக்கிறவன் தோள்ல குறுக்க துணி போட்ட மாதிரி வளைஞ்சு முதுகு வரைக்கும் தீக்காயம். கருப்பசாமிக்கு அன்னிக்கு மாயாண்டி மாமா, பச்சை அகத்திக் கம்பு ஒடிய ஒடிய தனித் தீபாவளி கொண்டாடுனாரு.



அவன் பேருலயே முக்கியமான பேரு 'திலி போல் திலி'. இது எப்படி அவனுக்குக் கெடைச்சதுன்னா, செந்தில்



**புஞ்சையில நிக்கறவுக ரோட்ல நிக்கற இவன்ட 'என்னல சொன்னான்னு' கேக்க, கருப்பசாமி யோசிக்காம 'திலி போல் திலி' அப்படிங்கறான்.**

நாயக்கருக்கு, புஞ்சைல உளுந்து அறுப்பு நடந்துக்கிட்டு இருந்தது. அவரு 'வெளை' கோயில்பட்டி ரோட்டு மேல இருக்கு. அங்க போய் 'டக்கரக் கிக்கர விட்டுப் பிணையில் அடிச்சுத் தூத்திவிட்டு உளுந்து தனியா, உளுந்தஞ்சண்டு தனியா எடுப்பாங்க. சில பேரு டக்கர் இல்லாம ஆளுவிட்டே அடிப்பாங்க. இப்படி ஒரு மகசூல் முடியும் போதே அந்தப் புஞ்சையைச் சுத்தி ஆடு, மாடுகளை ஒதுக்கிக் கிட்டு நிப்பாங்க. அந்தப் புஞ்சைக்காரன் சொன்னதும் ஆடு மாட்டை உள்ளே விட்டு மேய்ப்பாங்க.

இந்த மாதிரி எப்பண்டா செந்தில் நாயக்கரு சொல்லுவாரு. உள்ள பத்தி விடலாம்னு எல்லோரும் நிக்கிற மாதிரி கருப்பசாமியும் நிக்கான். அப்போ வேலை செய்யற பொம்பளையகிட்ட இவன் வாய்குடுத்தான். பொம்பளைய ஒண்ணு சொல்ல இவன் பதிலுக்கு ஒண்ணு சொல்லவுமா இருக்கும்போது இவன் கிட்ட ஒருத்தி ஏலேய் மணி 'எவ்வளவு' இருக்குமுங்க, அதுக்கு இவன் அது ஒரு கடாப்பெட்டி நிமுற 'இவ்வளவு' இருக்கும்னு கை ரெண்டையும் விரிச்சுக் காட்டுதான். உடனே எல்லாப் பொம்பளைகளும் கொல்லுன்னு சிரிச்சிட்டாங்க.

**கோ**யில்பட்டி ரோட்டுக்கிட்ட உள்ள புஞ்சைகள்ல வேலை நடக்கும் போது, வேலையாளுக பஸ் வர்ற நேரம் பாத்து வேலையை முடிப்பாங்க. நாலு மணிக்கு 'கேயார் கல்பனா' வண்டி கோயில் பட்டிக்கு போகும்போது, அன்னிக்குள்ள வேலைய அப்படியே நிப்பாட்டிருவாங்க. பிறகு மறு நாள்தான்.

அதுல ஒரு பொம்பளை பொழு தனைக்கும் கருப்பசாமிகிட்ட மணி கேக்கா. பஸ் வருதான்னு நிமுந்து நிமுந்து பாக்கா. புள்ளைக்காரியோ என்னம்மோ. அப்போ கிழக்கே இருந்து நல்லா சூட்டும் சட்டையும் போட்டவன் பைக்ல டமடமன்னு வந்தான். கருப்பசாமி அவனை நிப்பாட்டி மணி எத்தனைன்னு கேட்டான்.

சூட்டுப்போட்ட சுப்பன் மவன் தமிழ்ல சொல்லாம, 'திரி ஃபோர் திரி'ன்னு சொல்லிட்டுப் போய்ட்டான். புஞ்சைல நிக்கிறவுக ரோட்ல நிக்கிற இவன்ட்ட என்னல சொன்னான்னு கேக்க, கருப்பசாமி யோசிக்காம' 'மணி திலி போல் திலி அப்படிங்கான். ஒழுங்காச் சொன்னாலே ஆட்களுக்குத் தெரியாது. இவனுக்கு வேற பல்லு ஒடைஞ்சதுல இருந்து 'ரனா, ரினா' வராது, மரம்னா - மலம்பான். ஆளுக மறுபடி கேக்க, இவன் திலி போல் திலின்னு மறுபடி மறுபடி சொல்ல, பொம்பளைக குலவை போட்ட மாதிரி 'திலி போல் திலி! திலி போல் திலி'ன்னு கருப்பசாமி மானத்த வாங்குதாக.

வழக்கம்போல அன்னிக்கு ராத்திரி பண்ணரிவாளோட தெருவுல கூப்பாடு போடுவான் வேறென்ன செய்ய? செத்தாலும் பட்டப்பெயரை மாத்தவா முடியும்?

**(மண்வாசம் வீசும்)**

# தூரிகை பேசும் மௌன மொழி!

**ப**தினொராம் வகுப்பில் படிக்கும் மகாலட்சுமியின் பரத நாட்டிய நிகழ்ச்சி. ''பாடல் வரிகளை உள் வாங்கி அனுபவித்து, அதற்கேற்ப முக பாவங்களை மாற்றும் அவரது திறமை ஆச்சரியப்பட வைக்கிறது. ஆனால், பாடல் வரிகள் அவரது நடனத்தை ரசிக்கும் பார்வையாளர்களுக்குத்தானே ஒழிய, அவருக்கு இல்லை. காரணம், மகாலட்சுமிக்குச் சுத்தமாகக் கேட்கும் சக்தி கிடையாது. அவர் சென்னையில் இருக்கும் செவித்திறனும், பேசும் திறனும் இல்லாதவர்களுக்கான 'கிளார்க்' பள்ளியின் மாணவி'' என்று கூறி வியப்பில் ஆழ்த்துகிறார் டாக்டர் சுந்தர்.

அதுமட்டுமல்ல; ஒரு கால் ஊனமுற்ற மாணவரைக் காட்டி ''இந்த ஜகதீஷ் நன்றாக தபலா வாசிப்பான்'' என்றும், இன்னொருவரைக் காட்டி ''இந்த இதயத்துல்லா நன்றாக கீ-போர்டு வாசிப்பான்'' என்றும் அறிமுகப்படுத்துகிறார். ''இவர்களைப் போன்று இசைக் கருவிகள் வாசிக்கத் தெரிந்த சிலரும், நன்றாகப் பாடத் தெரிந்த பார்வையற்றவர்கள் சிலரும் இணைந்து, ஓர் இசைக்குழு அமைத்து மேடைகளில் நிகழ்ச்சிகள் வழங்குகிறார்கள்'' என்று சொல்லி மேலும் ஆச்சரியப்படுத்துகிறார்.

''பொதுவாக உடல் ரீதியாகவோ, மன ரீதியாகவோ பாதிக்கப்பட்ட குழந்தைகளில் சிலருக்கு அற்புதமான கலைத் திறமையும் ஆர்வமும் இருக்கும். இத்தகையோருக்காக, ஃப்ரீடம் அறக்கட்டளை என்ற அமைப்பை ஏற்படுத்தி, திறமையான மாற்றுத் திறன் கொண்ட குழந்தைகளைத் தேர்ந்தெடுத்து, அவர்களின் கலைத் திறமையினை வளர்க்க உதவித் தொகை வழங்கி, முறையான பயிற்சிக்கும் ஏற்பாடு செய்திருக்கிறோம். அதற்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறது'' என்று நெகிழ்கிறார்.


❖ டாக்டர் சுந்தர்



* ஃப்ரீடம் அறக்கட்டளையின் இசைக் குழு

''நீங்கள் அடிப்படையில் ஒரு மருத்துவராயிற்றே!'' என்று கேட்டால், ''நான் மருத்துவராவதற்கு முன் கர்னாடக இசை, இந்துஸ்தானி, ரபீந்திர சங்கீத் ஆகியவையும் பயின்றிருக்கிறேன். சென்னைப் பல்கலைக் கழகத்தில் இசையில் பட்டப் படிப்பு முடித்திருக்கிறேன். அப்போதே சென்னையின் பல்வேறு முக்கிய சபாக்கள் நடத்திய இசைப் போட்டிகளில் பரிசுகளும் பெற்றிருக்கிறேன். எனவே, இசையும் மருத்துவமும் எனக்கு இரண்டு கண்கள்'' என்கிறார்.

நானூறுக்கு மேற்பட்ட மேடைக் கச்சேரிகள் செய்த அனுபவமும் இவருக்கு உண்டு. கர்னாடக இசை குறித்து அனைவருக்கும் வரக்கூடிய சந்தேகங்களுக்கு விடை அளிக்கும் வகையில் ஆங்கிலத்தில் ஒரு புத்தகமும் எழுதி இருக்கிறார்.

அழகான ஓவியங்கள் சிலவற்றைக் காட்டி, ''இவை எல்லாவற்றையும் வரைந்தது மாற்றுத் திறன் கொண்ட மாணவ மாணவிகள்தான். அண்மையில் 'தூரிகை மொழி' என்ற தலைப்பில் ஓவியக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்து, அதில் இவர்களின் ஓவியங்கள் அனைத்தையும் இடம்பெறச் செய்தோம். பார்வையாளரின் பாராட்டு மழையில் நனைந்த எங்கள் குழந்தைகளுக்கு ஜுரமே வந்துவிட்டது'' என்று சொல்லிச் சிரிக்கிறார் டாக்டர் சுந்தர்.

மாற்றுத்திறன் கொண்ட குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடப் படிப்புடன் அவர்களின் கலைத் திறமைகளையும் கண்டறிந்து, அவர்கள் இருக்கும்



இடங்களுக்கே வாரம் இரண்டு அல்லது மூன்று நாட்கள் இசை, நடன, ஓவிய ஆசிரியர்களை வரவழைத்து பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்துள்ளது ஃப்ரீடம் அறக்கட்டளை. இப்போது இருபது குழந்தைகள் இந்தத் திட்டத்தின் கீழ் பயன்பெற்று வருகிறார்கள். இவர்களில் ஒருவரான 'விதார்த்தி' என்ற பெண், அண்மையில் காமன்வெல்த் நாடுகளுக்கு இடையிலான மாற்றுத் திறன் கொண்டோருக்கான ஓவியப் போட்டியில் இரண்டாம் இடத்தையும், ஆசிய அளவில் முதல் இடத்தையும் பெற்றிருக்கிறார். கடந்த வருடம் மன வளர்ச்சி குன்றிய 'மேதா ஆலம்' என்ற சிறுவன் ஓவியப் போட்டியில் பரிசு பெற்றிருக்கிறான்.

இது ஒரு பக்கம் என்றால், 'மியூசிக் ஃபோரம்' என்ற அமைப்பையும் நடத்தி, பள்ளி மாணவ மாணவிகளுக்கு கர்னாடக இசையை ரசிக்கும் ஆர்வத்தைத் தூண்டும் வகையில், ஆண்டுக்கு இரண்டு முறை நிகழ்ச்சிகளை நடத்தி, வருகிறார் டாக்டர் சுந்தர். வழக்கமாக சென்னை நகரின் பெரிய அரங்கங்களில் நடத்தப்படும் இந்த நிகழ்ச்சிகளில் பிரபலமான பள்ளிகளிலிருந்து மட்டுமில்லாமல், மாநகராட்சிப் பள்ளிகளிலிருந்து கூட நிறைய மாணவர்கள் வந்து கலந்து கொள்ளுவது குறிப்பிடத்தக்கது.

இந்த வருடத்து இசை விழா சீசனில், மியூசிக் அகாடமியில் மாற்றுத் திறன் கொண்ட குழந்தைகளுக்கு இசைப் பயிற்சி வழங்குதல் குறித்து லெக்-டெம் நிகழ்ச்சி வழங்கியிருக்கிறார்.

– கௌதம் ராம்






* மாற்றுத் திறன்கொண்டோரின் ஓவிய கைவண்ணம்...

## இடி சிரிப்ஸ்



"சுருக்கமா லீவ் லெட்டர் எழுதக் கூடாதா? வடகிழக்குப் பருவமழை தீவிரமாகப் பெய்ததால், ஆபீஸுக்கு வரமுடியலைன்னு எழுதணுமா?"

– எஸ்.மோகன்

# தூறல் கவிதைகள்

தஞ்சை சகா



காலம் நீ
கடிகாரம் நான்
சுற்றிச்சுற்றி
உன்னையேதான்
பிரதிபலிக்கிறேன்
நீதான்
ஒதுக்கித் தள்ளி
ஓடுகிறாய்

தயவுசெய்து
மழை பெய்யும்போது
வெளியில் வந்து
தலைகாட்டிவிட்டுச் செல்
உன்னைத் தேடித்தேடி
எல்லா ஜன்னல்களுக்குள்ளும்
நுழைகிறது தூறல்

உடம்பு சரியில்லையாமே
மாத்திரைகள் எல்லாம்
தயாராகிவிட்டன
உன்னுள்
சுகமாகக் கரைவதற்கு



நீ என்னை
அழைப்பதற்காகவே
பெயர் சுமந்து
வாழ்கிறேன்
மௌன உளி கொண்டு
என் துயரம்
செதுக்கியது போதும்



போதும் போதும்
போகலாம் வா
எனக்குள் நீயும்
உனக்குள் நானும்
ஊர்ந்தபடி...



# நஞ்சை அருந்தும் பிஞ்சுகள்!

**க**டந்த சில நாட்களாக ஒட்டு மொத்த வட இந்திய மக்களும் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். காரணம், கொட்டும் பனி, உறைய வைக்கும் குளிர் காற்று மட்டுமல்ல, தலைநகர் டில்லிக்கு அருகில் இருக்கும் குர்காவுன் பகுதியிலுள்ள பிரபலமான பள்ளிக்கூடத்தில் நடந்த துப்பாக்கிச் சூடு சம்பவம்! அயல் நாடுகளில் மட்டுமே அரங்கேறி வரும் அந்த அவலம் முதன்முறையாக நம் இந்திய மண்ணில்...

மத்திய சமூகநீதி துறை அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன் இந்தச் சம்பவம் குறித்துக் கவலை ரேகைகள் முகத்தில் ஓட பேசினார். ''தொலைக்காட்சியின் பாதிப்பால்தான் நம் நாட்டுக் குழந்தைகள் இப்படிப்பட்ட வன்முறைகளில் ஈடுபடுகிறார்கள் 'ஸ்பைடர் மேன்' நிகழ்ச்சியை பார்த்துவிட்டு கண்மூடித்தனமாக மாடியிலிருந்து கீழே குதிக்கப் பழகும் குழந்தைகள், WWF நிகழ்ச்சியைப் பார்த்துக் குத்துச் சண்டையிடுதல் என எல்லா விபரீதங்களும் தொலைக்காட்சியில்தான் நடக்கிறது. சினிமாவுக்கு சென்ஸார் போர்டு இருப்பது போல, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளையும் கன்ட்ரோல் செய்ய நிச்சயம் ஓர் அமைப்பு வேண்டும்.

அந்தக் காலத்தில் சிறுவர்கள் அமைதியாக, அழகான, அறிவுபூர்வமான விளையாட்டுக்களை விளையாடினார்கள். ஆனால், இன்று தொலைக்காட்சி பார்ப்பதை மட்டுமே ஒரே பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறார்கள். பிஞ்சு மனங்களில் வன்முறை எனும் நஞ்சை விதைப்பது இதுதான். தத்தித் தவழும் குழந்தை கூட 'டாம் அண்டு ஜெர்ரி'யைப் பார்த்து அடிக்கவும், துரத்தவும், பழிக்குப் பழி வாங்கவும் கற்றுக்கொள்கிறது.

பெற்றோர்கள் தாங்கள் உண்டு தங்கள் அலுவலகம் உண்டு என்று இருப்பதால் சரி வர பிள்ளைகளைக் கண்காணிப்பதில்லை. குழந்தை பள்ளியை விட்டு வந்ததும், பள்ளியில் என்ன நடந்தது என பொறுமையாகக் கேட்டிருந்தால், அந்தக் குர்காவுன் சம்பவத்தில் ஈடுபட்ட பையன் தன் மனத்தில் உள்ள வெறுப்பையும்,

கோபத்தையும் தன் தாயிடம் கொட்டித் தீர்த்திருப்பான். இப்படி 'துப்பாக்கி' பக்கம் போயிருக்க மாட்டான்.

குழந்தைகளது கண்ணிலும், கையிலும் படும்படி துப்பாக்கியை எப்படி விட்டுச் செல்கிறார்கள் என்பதும் புரியவில்லை. என் பாதுகாப்புக்காகத் துப்பாக்கி வேண்டி விண்ணபித்தபொழுது அது கிடைக்க பல காலம் ஆனது. ஆனால், இங்கே அது எப்படிச் சர்வசாதாரணமாகக் கிடைக்கிறது என்பது ஓர் அதிர்ச்சியான ஆச்சரியம்.



சுப்புலட்சுமி ஜெகதீசன்

சம்பவத்தில் கைது செய்யப்பட்ட பையன்களின் எதிர்காலம் என்பது நிச்சயம் ஒரு பெரிய கேள்விக்குறிதான். சீர்திருத்த இல்லங்களிலிருந்து வரும்பொழுது திருந்தி வருபவர்களும் உண்டு; மேலும் மோசமாகிப் போனவர்களும் உண்டு. முன்பு இந்தச் சிறுவர்கள் சீர்திருத்தும் இல்லங்கள் எங்களது இலாகாவாக இருந்தபொழுது பல மோசமான நிலையில் உள்ள சீர்த்திருத்தப் பள்ளிகளைப் பார்த்து வேதனை அடைந்தேன். பழைய கட்டடங்கள், அடிப்படை வசதிகள் கூட இல்லாத பல இடங்களைச் சீரமைக்கும் பணிகளைச் செய்துள்ளேன்'' என்கிறார் சுப்புலட்சுமி ஜெகதீசன்.

**த**னியார் நிறுவனத்தில் பணி புரியும் நொய்டாவைச் சேர்ந்த அம்பிகா ஸ்ரீகாந்த், ''சங்கீதம், பாட்டு, யோகா என குழந்தைகளை நல்வழிபடுத்த எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. அவற்றைப் பெற்றோர்கள் கற்றுத்தர வேண்டும்'' என்கிறார்.

''இது கம்ப்யூட்டர் காலம். இந்த மாதிரி குளிர் அதிகமாக உள்ள டெல்லி மற்றும் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் என்னைப் போன்ற குழந்தைகள் வெளியில் சென்று விளையாட முடியாத ஒரு சூழ்நிலையில் கம்ப்யூட்டரில்தான் விளையாட வேண்டி உள்ளது. அந்தக் கம்ப்யூட்டரில் வரும் பல ஆன்லைன் கேம்ஸ்களோ அடிதடி மற்றும் துப்பாக்கிச் சூடு விளையாட்டுகளை மட்டுமே மையமாகக் கொண்டு வருகின்றன. என்ன செய்ய?'' என்று கேட்கிறாள் மாணவி ஹரிப்ரியா.

## எச்சரிக்கை

**"தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை கன்ட்ரோல் செய்ய நிச்சயம் ஓர் அமைப்பு வேண்டும்..."**

''நான் ஒரு முன்னாள் குர்காவுன் வாசி என்பதால் இச்சம்பவம் என்னை ரொம்பப் பாதித்துள்ளது. இந்தியாவில் இதுவே முதல் முறையாகவும் கடைசி முறையாக நடந்ததாகவும் இருக்க வேண்டும். நாம் என்ன கேட்டாலும் கிடைத்துவிடும்; நம்மை யாரும் கண்டிக்க மாட்டார்கள் என்ற மனப்போக்குக் குழந்தைகளிடம் வளராமல் பார்த்துக்கொள்வது பெற்றோர்களின் பொறுப்பு'' என்கிறார் கீதா சுப்ரமணியன்.



செய்திச் சித்திரம்:
**நளினி சம்பத்குமார்**

ஜரீனா, தம்மை ஓர் அதிர்ஷ்டக்கட்டை என்று நினைத்துக் கலங்கிக்கொண்டிருந்த காலம் அது. அவள் பிறந்த குடும்பம் ரொம்ப வசதியான குடும்பம் இல்லை. அதேபோல் தான் மணமாகிச் சென்ற வீட்டிலும் அவளுக்கு அதிர்ஷ்டம் வாய்க்கவில்லை. காலம் முழுவதும் காப்பாற்றுவான் என்று நினைத்த கணவன், இரண்டு குழந்தைகளைக் கொடுத்துவிட்டு, பிரிந்து சென்றுவிட்டான். தனியாகக் குழந்தைகளைப் பேணி வளர்க்க வேண்டிய பொறுப்பு வேறு சேர்ந்துகொண்டது. வாழ்க்கையை எப்படிச் சமாளிப்பது என்று புரியாமல், சிலசமயம் தற்கொலை செய்துகொள்ளலாம் என்றுகூடத் தோன்றியது. அவள் வசித்த அந்தப் பாக்கம் கிராமத்தில் இருந்து சேவாலயா பள்ளிக்கு வருகின்ற ஒரு மாணவன், சாதி, மத பேதம் தெரியாமல் வளர்ந்த காரணத்தால், அந்த முஸ்லிம் பெண்ணுக்கு இங்கிருந்து 'சுவாமி விவேகானந்தரின் அறிவுரைகள்' என்ற புத்தகத்தை எடுத்துச் சென்று கொடுத்தான். அதை வாங்கிக்கொண்ட ஜரீனா, பலநாள் அதைப் பிரித்துப் பார்க்கவில்லை. இறை நம்பிக்கை குறைந்து இருந்த இந்த நேரத்தில், ஒரு துறவியின் புத்தகத்தை ஏன்

# எழுந்திரு... விழித்திரு...

படிக்க வேண்டும் என்ற எண்ணம். பல மாதங்கள் கழித்து என்னதான் இருக்கிறது இந்தப் புத்தகத்தில்; பார்த்துவிடுவோமே என்று பக்கத்தைப் புரட்டினார். 'நம்பிக்கையை இழந்துவிடாதே! பாதை கத்தி முனையில் நடப்பதைப்போல மிகவும் கடினமானதுதான். எனினும் எழுந்திரு; விழித்துக் கொள்; மனம் தளராதே. நீ அடைய வேண்டிய உனது இலட்சிய

தலைவன் என்பவன் ஒரு பெரிய கூட்டத்துக்கு நம்பிக்கை தருபவனாக இருக்க வேண்டும். அவனைப் பார்த்தாலே எல்லோருக்கும் தன்னம்பிக்கை வர வேண்டும்!

'சேவாலயா' முரளிதரன்



மாகிய குறிக்கோளைக் கண்டுபிடி. சகோதரா நீ அழுவதேன்? மரணமோ, நோயோ உனக்கில்லை. நீ ஆனந்த மயமானவன்! நீ உன் ஆன்மாவில் நிலைத்திடு.' இந்த வரிகளைப் படித்த ஜரீனா சிலிர்த்தெழுந்தார். 'என் குழந்தைகளை வளர்க்க வேண்டிய பொறுப்பு இருக்கிறது. அதை நான் நிறைவேற்றியே தீருவேன்' என்று முடிவு செய்துகொண்டார். பிறகு, அவர் மனத்தில் மீண்டும் இறை நம்பிக்கை துளிர்விட்டது. புனித குர்-ஆனை எடுத்து ஓதினார். அதிலும் மனவலிமை பற்றிய கருத்துக்கள் இருந்ததைக் கண்டார். அல்லாவின் அருளால் நல்ல காலம்

# நிலைத்திடு!

வந்தது. இன்று அந்தப் 'பாக்கம்' கிராமத்தில் 'லக்கி ஃபேன்ஸி ஸ்டோர்ஸ்' என்ற கடையைத் திறந்து, தம் குடும்பத்துக்கு வேண்டிய வருமானத்தைத் தாமே ஈட்டுகிறார்.

**ஸ்ரீ**நகருக்குப் பக்கத்திலுள்ள கிராமத்தில் வசிக்கும், ஓர் இஸ்லாமியப் பாட்டியைத் தேடி, தமது சீடர்களுடன் சென்றார் சுவாமி விவேகானந்தர். யார் இந்தப் பாட்டி? ஏன் சுவாமிஜி அந்தப் பாட்டியைப் பார்க்கச் செல்கிறார் என்று சீடர்களுக்குக் குழப்பம்! அந்தப் பாட்டியைப் பார்த்ததும் சுவாமிஜிக்கு மிகுந்த சந்தோஷம். தம் சீடர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். 'நான் சென்றமுறை இந்த ஊர் வழியாக வந்த போது, எனக்குக் குடிக்கத் தண்ணீர் எங்கேயும் கிடைக்கவில்லை. அப்போது இந்தப் பாட்டிதான் தண்ணீர் கொடுத்து உதவினார். நான் தாகம் தீர்ந்த பின், 'நீங்கள் எந்த மதம்?' என்று விசாரித்தேன். 'அல்லாவின் கருணையால் நான் ஒரு முஸ்லிம்' என்று மிகுந்த பெருமையுடன் கூறினார். 'என்ன இறை பக்தி! என்ன மதப் பற்று! இப்படி நாம் எல்லோரும் நம் கலாசாரத்தின்மீதும், நம் நாட்டின் மீதும் பற்றுகொண்டு இருந்தால், இந்தியா அடிமை நாடாக இருக்க வேண்டியது இல்லை. அதனால்தான் இந்தப் பெண்மணியைத் தேடி மீண்டும் இங்கே வந்தேன்'' என்றார்.

''**கா**ட்டில் இருந்த ஒரு கர்ப்பிணி சிங்கம், ஆட்டு மந்தையைப் பார்த்ததும் பசி வேகத்தில் பாய்ந்தது. பாய்ந்த வேகத்தில் சிங்கக் குட்டியை ஈன்றது. அந்த அதிர்ச்சியில் அது அங்கேயே மாண்டு விடவே, அந்த சிங்கக்குட்டியும் ஆட்டு மந்தையில் சேர்ந்துகொண்டது. காலப்

போக்கில் தானும் ஓர் ஆடு என்று நினைத்துக்கொண்டு அந்த சிங்கக்குட்டி 'மே... மே' என்று கத்தியது; புல் தின்றது; பாய்ந்து வரும் சிங்கங்களைப் பார்த்துப் பயந்து ஓடியது. ஒரு சிங்கம் இதைக் கவனித்துவிட்டது. தனியாக அந்த சிங்கக்குட்டியை அழைத்து 'நீ ஆடு அல்ல; சிங்கம்' என்று சொன்னது. தன்னைப் போல் கர்ஜனை செய்யச் சொன்னது. ஒரு குளத்தில் அதன் பிம்பத்தைப் பார்க்கச் சொன்னது. அந்தக் குட்டியும் சிங்கமும் ஒரே மாதிரி இருப்பதை அன்று தான் அந்த 'ஆட்டுக் குட்டி' (எ) சிங்கக் குட்டி உணர்ந்துகொண்டது. உடனே தானும் பெரிதாய் குரலெடுத்து கர்ஜனை செய்தது.''

- இந்தக் கதையைச் சொன்ன சுவாமி விவேகானந்தர், ''நீங்கள் ஆடுகள் இல்லை. சிங்கக்குட்டிகள், உங்களை நீங்களே ஆடுகள் என்று மன வசியம் செய்து கொண்டு இருக்கிறீர்கள். அதை விட்டு விடுங்கள். அளவிட முடியாத வலிமை உங்களுக்கு உண்டு என்பதை உணருங்கள்'' என்று போதிக்கிறார்.

**"நீங்கள் ஆடுகள் இல்லை. சிங்கக்குட்டிகள்; உங்களை நீங்களே ஆடுகள் என்று மனவசியம் செய்துகொண்டு இருக்கிறீர்கள். அதை விட்டுவிடுங்கள். அளவிடமுடியாத வலிமை உங்களுக்கு உண்டு என்பதை உணருங்கள்..."**

'மரணமோ, மாற்றமோ எனக்கு விதிக்கவில்லை' என்று சுவாமி விவேகானந்தர் சொன்னது எப்படிச் சாத்தியம்? மரணம் நம்மை அண்டாமல் இருக்குமா? என்றால் அதற்கு பாரதியின் பதில்

*'நாணத்தை கவலையினைச்*
*சினத்தைப் பொய்யை*
*அச்சதை வேட்கைதனை*
*அழித்துவிட்டால்*
*அப்போது சாவுமங்கே அழிந்து*
*போகும்'*

கவலை, அச்சம் ஆகியவற்றை அழித்தால், அங்கே மரணம் மடிந்துபோகும் என்பது மகாகவி பாரதி வாக்கு.

தலைவன் என்பவன் ஒரு பெரிய கூட்டத்துக்கு நம்பிக்கை தருபவனாக இருக்க வேண்டும். அவனைப் பார்த்தாலே எல்லோருக்கும் தன்னம்பிக்கை வர வேண்டும். தன்னம்பிக்கையே தலைமைப் பண்புகளுக்கு ஆதாரமானது.

**(சுவாசிப்போம்)**



இலங்கையிலிருந்து இந்தியா வரும் ஓர் அகதியின் காதல் கதை. ராமேஸ்வரம் - யாழ்ப்பாணம் என்று தலைப்பிலேயே எதிர்பார்ப்பை எகிறச் செய்து விடுகிற இயக்குநர், வலியும் வசீகரமும் கொண்ட காதலைக் கொடுக்க முயற்சி செய்திருக்கிறார்.

காதலைச் சுமந்தாலும் காட்டிக்கொள்ள முடியாத தேசத்து வடுக்களுடன் வலம் வரும் மனிதனாக, பொளந்து கட்டியிருக்கிறார் ஜீவா. பாவனாவை விலக்கி விலக்கித் தள்ளுவதும், வெட்ட வெட்டப் படரும் கொடிபோல் பாவனா மீண்டும் மீண்டும் அவரிடமே அடைக்கலம் புகுவதும் காதல் ஹைக்கூ! நிதானமும் ஆக்ரோஷமும் தளும்பி நிற்கும் நடிப்பு தாராளமாய்க் கைவந்திருக்கிறது ஜீவாவுக்கு.

காதலிப்பதே வேலை என்று பழியாய்க் கிடந்தாலும் பரவசப்படுத்துகிறார் பாவனா. கையை வெட்டிக்கொள்ளும்போதும், காதலனுக்காகக் காத்திருக்கும்போதும் உணர்வுக் குவியல் நடிப்பு. பேரனுக்காகவே வாழும் மணிவண்ணன், நெஞ்சத்தில் கலபமாக வந்து உட்கார்ந்துவிடுகிறார். அவர் மரணத்தின்போது மனம் நம்மையறியாமல் பரிதாபம் கொள்கிறது. லால், பாசக்கார தந்தை. 'அவள யாழ்ப்பாணத்துக்கு அனுப்பிட்டு நான் இங்க எப்படிடா உயிர் வாழுறது' என்று கதறும்போது காந்தமாய்க் கவர்கிறார். வில்லனா, காமெடியனா என்று பிரிக்கமுடியாவிட்டாலும் மாறுதலான பங்களிப்பைத் தந்திருக்கிறார் போஸ் வெங்கட்.

நிருவின் இசையில் 'அலைகளின் ஓசை' அழகான கவிதை. பின்னணியிலும் முந்தியிருக்கிறார். குருதேவ் - வெற்றியின் ஒளிப்பதிவு உயர்தரமானது. கடற்கரை மணல் துகள்கூட எவ்வளவு ரம்மியமாக இருக்கிறது! முதல் படத்திலேயே அழுத்தமாகத் தடம்பதிக்கத் துடித்திருக்கும் செல்வத்தின் இயக்குநர் தாகம் படம் முழுக்க விரவிக் கிடக்கிறது. என்றாலும், சதா காதலையே பேசிக்கொண்டிருப்பதும், இலங்கைத் தமிழை யாருமே ஒழுங்காக உச்சரிக்காததும், அகதிகள் இஷ்டத்துக்கு ஊர் சுற்றுவதும், ரகசிய வேலைகளில் ஈடுபடுவதும், அழுத்தமில்லாத க்ளைமாக்ஸூம் படத்தின் அந்தஸ்தைக் குறைக்கின்றன. வசனங்களில் காட்டிய வேகத்தை திரைக்கதையிலும் காட்டியிருந்தால், இன்னும் அழகாக வந்திருக்கும் ராமேஸ்வரம்.

- மதுமிதா



# உள்ளும் புறமும்

# பாஸ்போர்ட்

வெடித்து முடித்த பட்டாசுத் துகள்கள் போல் சிதறிக்கிடக்கிறார்கள் ஈராக் மக்கள். அப்பா, அம்மா, குழந்தை குட்டி என்று சேர்ந்தாற்போல் ஒரு குடும்பத்தைப் பார்ப்பது அங்கே அரிது. அம்மா லாரி ஏறி ஜோர்டனுக்குப் போயிருப்பார்; அப்பா, சிரியாவுக்கு. தாத்தா குண்டுவெடிப்பில் இறந்திருப்பார்; பாட்டியோ அதிர்ச்சியால்.

மறுகட்டுமானம் என்று சொல்வார்கள். சிதறிப்போனதைச் சேகரிக்க வேண்டும். இடிந்த கட்டடங்களைச் சீரமைக்க வேண்டும். தெருக்களைக் கூட்டிப் பெருக்க வேண்டும். வெடித்த குண்டுகளை, தோட்டாக்களை வாரியெடுத்து எச்சரிக்



கையுடன் மூலையில் கொட்ட வேண்டும். பள்ளிகளை, மருத்துவ மனைகளைச் சரி செய்ய வேண்டும்.

ஈராக்கில் போர் முடிந்துவிட்டதா, இல்லையா? என்று ஒருவராலும் இன்னமும் சொல்ல முடியவில்லை. 'எப்பவோ முடிச்சாச்சே' என்கிறது அமெரிக்கா. 'ஆமாம்' என்கிறது ஈராக் அரசாங்கம். ஈராக்கா? போரா! என்கிறது பிரிட்டன். ஆனால், டி.வி.யைத் திருகிப் பாருங்கள். ஜீப் ஒன்று சாலை ஓரமாக நின்றுகொண்டிருக்கும். பளபளக்கும் ஏ.கே.47களைப் பிடித்தபடி அமெரிக்க வீரர்கள் ரோந்து வந்துகொண்டிருப்பார்கள். பேக்கிரவுண்டில் டயரோ டியூபோ அல்லது கறுப்பாகப் புகை கக்கும் ஏதாவதொரு பொருள் குபுகுபுவென்று எரிந்துகொண்டிருக்கும். அது நிற்க.

ஈராக்கின் தற்போதைய பிரச்னை வேறு. மூட்டை, முடிச்சுகளோடு கும்பல் கும்பலாக ஊர் திரும்பும் ஈராக்கியர்களை என்ன செய்வது? வராதே என்பதா? வந்தால் உன் வீட்டைக் கண்டுபிடிக்க முடியாது என்பதா? என் அப்பா எங்கே, குழந்தை எங்கே, கன்றுக்குட்டி எங்கே என்று கேட்காதே என்பதா? முன்பு நீ வாழ்ந்த வாழ்க்கை உனக்கு இனி கிடைக்காது என்பதா? போர் இன்னமும் முடியவில்லை என்பதா? உன் பாதுகாப்புக்கு எங்களால் உத்தரவாதம் தர முடியாது என்பதா?

தலைமுடியைப் பிய்த்துக்கொண்டிருக்கிறது அரசாங்கம். சிரியாவிலிருந்து மட்டும் ஒரு நாளைக்கு 600 பேர்கள் வருகிறார்கள். சிரியா அளித்த விசா காலம் முடிந்து விட்டது. வேறு வழி இல்லை. வந்துதான் தீர வேண்டும். போரால் கலைக்கப்பட்ட ஈராக்கியர்களின் எண்ணிக்கை, குறைந்தது நான்கு மில்லியன் என்கிறது ஓர் அரசாங்கத் தகவல். இதுவரை திரும்ப வந்தவர்களின் எண்ணிக்கை ஒரு இலட்சத்துச் சொச்சம் மட்டுமே.

எனில், இன்னும் மில்லியன் கணக்கில் மக்கள் திரும்ப இருக்கிறார்கள் என்று எடுத்துக்கொள்ளலாமா? ஆ! அவர்களுக்கு உணவு? உறைவிடம்? மருத்துவ வசதிகள்? எங்கே போவது? ஐ.நா. உதவுகிறது. தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் பல முகாம் அமைத்து, நிறைய பொட்டலங்கள் தருகிறார்கள்; ஊசி போடுகிறார்கள்; கட்டுக் கட்டுகிறார்கள். சரி, இன்னும் எத்தனை நாளைக்கு? எத்தனை பேருக்கு?

ஈராக் தொழில்துறை அமைச்சர் பயந்து

# அகதிகள்!

நடுநடுங்கியபடி ஒரு செய்தியை வெளியிட்டிருக்கிறார். உணவுக் கிடங்குகள் வேகவேகமாகக் காலியாகிக் கொண்டிருக்கின்றன. இதே நிலைமை நீடித்தால், உணவு விநியோகம் கடுமையாகப் பாதிக்கப்படும்.

உள்ளவர்களுக்கே உணவு இல்லை. இதில், பஸ்ஸிலும் ரயிலிலும் ஒட்டகத்திலும் தொற்றிக்கொண்டு வருபவர்களை என்ன செய்வது? அடையாள அட்டையைப் பிரித்துக்காட்டுகிறார்கள். பாஸ்போர்ட், விசா, வீட்டின் புகைப்படம், கணவரின், குழந்தைகளின் புகைப்படங்கள். யுத்தகளத்தில் இந்தக் காகிதங்களுக்கு ஒரு மதிப்புமில்லை என்று அவர்களுக்குச் சொல்ல முடியுமா? இருப்பிடத்தைத் தொலைத்துவிட்டு, இரும்பு வேலிக்குப் பின்னால் காத்துக்கிடக்கிறார்கள். உள்ளே இழுத்துக்கொண்டால் பொறுப்பு ஒட்டிக் கொள்ளும். வெளியில் தள்ளிவிட்டால் கெட்ட பெயர். பாஸ்போர்ட் வைத்துக் கொண்டிருக்கும் அகதிகள், தேசம், சொந்தம், பந்தம் எல்லாம் இருந்தும் அகதிகள்.

அண்டிச் சென்ற லெபனான் அரசாங்கம் தெளிவாகவே சொல்லிவிட்டது. இப்போது எங்கள் நாட்டில் உள்ளவர்களுக்கே உணவில்லை. இதில், எங்கிருந்து உங்களை உபசரிப்பது? ஆகவே வெளியேறிவிடுங்கள். இல்லாவிட்டால், உங்களைச் சிறையில் அடைக்க வேண்டியிருக்கும்.

சிரியாவிலும் ஜோர்டனிலும் இதே நிலைதான். ஓர் அந்நிய தேசத்தில் உணவு தாருங்கள், உடை தாருங்கள் என்று கை நீட்டி பிச்சை கேட்கலாம். ஆனால், தன்மானம் தடுக்கிறது. எத்தனை சக்தி வாய்ந்த குண்டுகளை வீசினாலும், சில விஷயங்களைச் சேதப்படுத்த முடிவதில்லை.



மருதன்

எஸ்.நடராஜன்

சபைநிறைந்த அரங்குகளில்
பாடப்பட்டு வருகிறது எனது பாடல்
நாம் அனைவரும் பாடவேண்டியதான
நிர்ப்பந்தங்களில் அமர்ந்திருக்கின்றோம்
தேர்ந்த இசைவல்லுநர்களின் பயிற்சியில்
பாடப்பட்டு வருகின்றன
உங்களது பாடல்கள்
நான் பாடிக்கொண்டிருக்கும்
இந்தப் பாடலின் வரிகளில்
இனிமையில்லை
குறிப்பிடும்படியான சங்கதிகள்
இதில் நிரம்பியில்லை
பிறர் குறித்துக்கொள்ளும்படியான
இசைக்குறிப்புகளும் கொண்டதல்ல
மனங்கவரும் ஆலாபனைகளோ
சாஸ்திரிய முறைமைகளோ
சிறிதும் இதிலில்லை
சுட்டெரிக்கும் வறண்ட நிலத்தின்
பெருத்த பாலைப் புனலின்
வாரியடிக்கும் வெம்மையின் வெடிப்பில்
பாதமுட வலியின் கசிவில்
சீழ்தெறிக்கும் என் குரலின் ஓலத்தில்
நீங்கள் இவற்றை எதிர்பார்ப்பது
கொஞ்சமும் நியாயமில்லை

# நியாயமற்ற எதிர்பார்ப்பு!



# 7. சிதறிய இரத்தினங்கள்

விக்கிரமன் காட்டு வழிக்குள் புகுந்து கண்ணுக்கு மறைந்ததும், ஒற்றர் தலைவன் மீண்டும் அந்தச் சிற்ப வீட்டுக்குள் புகுந்தான். மார்பில் இரண்டு கைகளையும் கோத்துக் கட்டியவண்ணமாகச் சற்றுநேரம் அங்கிருந்த தெய்வீகச் சிலைகளைப் பார்த்துக்கொண்டு நின்றான். அப்போது அவனுடைய கண்களில் நீர் ததும்பிற்று. பிறகு, அங்கு வந்த கிழவியைப் பார்த்து, ''அம்மா! இந்தப் பிள்ளை மறுபடியும் ஒரு வேளை இங்கு வந்தானானால், அவனுக்குத் தங்குவதற்கு இடங்கொடு; ஆனால், என்னுடைய இரகசியத்தை மட்டும் உடைத்து விடாதே! மறுபடியும் ஐந்தாறு நாளில் நான் வருகிறேன்'' என்றான். ''அப்படியே சுவாமி'' என்றாள் கிழவி. பிறகு ஒற்றர் தலைவன் அந்தச் சிற்ப மண்டபத்தின் பின்புறம் சென்றான். அங்கே விக்கிரமன் ஏறிச் சென்றது போலவே தத்ரூபமாய் இன்னொரு குதிரை இருந்தது. அதன்மேல் வெகு லாகவமாக ஏறி உட்கார்ந்து அவ்வீரன் கிளம்பினான். விக்கிரமன் போன வழியாக அவன் போகாமல், முதல் நாள் இரவு வந்த காட்டுக் கொடி வழியில் புகுந்து சென்றான். சற்று நேரத்துக்கெல்லாம் விக்கிரமன் வழிப்பறிக்கு ஆளான இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

ஒற்றர் தலைவன் அவ்விடத்தை நெருங்கி அங்கும் மிங்கும் உற்றுப் பார்த்தான். அவனுடைய முகத்தில் ஆச்சரியக் குறி தென்பட்டது. உற்றுப் பார்க்கப் பார்க்க அவனுடைய அதிசயம் அதிகமாயிற்று. ஆச்சரியத்துக்குக் காரணம் என்னவென்றால், முதல் நாள் இரவு இரத்தின வியாபாரியின் வாளுக்கும் தன்னுடைய வாளுக்கும், இரையாகி விழுந்தவர்களின் உடல்கள் அங்கே காணப்படவில்லை!

அவ்விடத்தில் மிகவும் அருவருப்பான, கோரக்காட்சி ஒன்றை ஒற்றர் தலைவன் எதிர்பார்த்தான். இரவில் காட்டு மிருகங்கள் இரை தேடி அங்கு வந்திருக்குமென்றும், அவை இரை உண்ட பிறகு, எலும்புக் கூடுகள் சகிக்கமுடியாத காட்சியாக இருக்குமென்றும் அவன் எண்ணினான்.

ஆனால், அங்கே அப்படியொன்றும் காணப்படவில்லை. காட்டு மிருகங்கள் எலும்பைக்கூட விழுங்கியிருக்குமா? அல்லது உடல்களை அப்படியே இழுத்துக்கொண்டு போயிருக்குமா? அப்படிப் போயிருந்தாலும், அந்த ஆட்களின் துணிமணிகள், வாட்கள் எல்லாம் எங்கே? - 'நாம் போன பிறகு இங்கு யாரோ வந்திருக்கிறார்கள்! என்னமோ நடந்திருக்கிறது!' என்று ஒற்றர் தலைவன் எண்ணினான்.

உடனே அவன் குதிரையிலிருந்து குதித்து, இன்னும் கவனமாக அங்குமிங்கும் உற்றுப் பார்க்கத் தொடங்கினான். சட்டென்று ஒரு பொருள் அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. அவனுடைய முகத்தில் அப்போது வியப்பு மட்டுமல்லாமல் கேள்விக்குறியும் தோன்றியது. அந்தப் பொருள் என்னவெனில், ஒரு மண்டை ஓடுதான்!

நேற்று அங்கு இறந்து விழுந்தவர்களின் மண்டை ஓடாக அது இருக்க முடியாது. அது மிகப் பழைமையான மண்டை ஓடு. ''நேற்று நாம் போன பிறகு இங்கு வந்தவன்

# பார்த்திபன் கனவு

கபாலிகனாயிருக்க வேண்டும். அவன் கழுத்தில் போட்டிருந்த மண்டை ஓட்டு மாலையிலிருந்துதான் இது விழுந்திருக்க வேண்டும். அவனோ, அவர்களோதான் இங்கே செத்து விழுந்தவர்களின் உடல்களை அப்புறப்படுத்தியிருக்க வேண்டும்!' என்று ஒற்றர் தலைவன் எண்ணமிட்டான்.

இன்னும் அவ்விடத்தில் அவன் சுற்று முற்றும் பார்த்தபோது, ஓரிடத்தில் இரத்தினங்கள் கொஞ்சம் சிதறிக் கீழே கிடப்பதைக் கண்டான். குள்ளன் இரத்தின மூட்டைகளைக் கீழே போட்டபோது ஒரு மூட்டை அவிழ்ந்து போய்ச் சிதறி இருக்க வேண்டும். அந்த இரத்தினங்களைத் திரட்டி எடுத்துக்கொள்ளலாம் என்று எண்ணி ஒற்றர் தலைவன் குனிந்தான்.

அந்தச் சமயத்தில் கொஞ்ச தூரத்தில் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்டது! சத்தத்திலிருந்து நாலைந்து குதிரைகளாவது வருகின்றன என்று தோன்றியது. ஒற்றர் தலைவன் உடனே விரைந்து குதிரை மேல் ஏறி, அதைச் செலுத்திக்கொண்டு பக்கத்திலிருந்த காட்டுக்குள் புகுந்தான். குதிரையைக் கொஞ்ச தூரத்தில் விட்டுவிட்டுத் தான் மட்டும் இறங்கி வந்து, சற்றுத் தூரத்தில் ஒரு மரத்தடியில் நன்கு மறைந்து கொண்டான். அவன் மறைவிலிருந்த போதிலும், பாதை அங்கிருந்து நன்றாகத் தெரிந்தது.

அந்த இடத்துக்கு வந்ததும் குதிரைகள் சடேரென்று நிறுத்தப்பட்டன. ஆறு குதிரைகள் மேல் ஆறு வீரர்கள் வந்தார்கள். அவர்களுக்குத் தலைவனாகத் தோன்றியவன் மீது ஒற்றர் தலைவனின் பார்வை விழுந்ததும், அவனுடைய புருவங்கள் நெரிந்து ரொம்பவும் மேலே போயின. அவன் முகத்தில் அப்போது வியப்பு, அருவருப்பு, கோபம் எல்லாம் கலந்து காணப்பட்டன... அந்தத் தலைவன் வேறு யாருமில்லை; மாரப்ப பூபதிதான்!

வேகமாக வந்துகொண்டிருந்த குதிரையைச் சடேரென்று முதலில் நிறுத்தியவனும் மாரப்ப பூபதிதான். அவன் நிறுத்தியதைப் பார்த்துத்தான் மற்றவர்கள் சடேர் சடேரென்று தத்தம் குதிரைகளை நிறுத்தினார்கள். மாரப்ப பூபதி கீழே இறங்கினான். சற்று முன்னால் ஒற்றர் தலைவன் உற்றுப் பார்த்ததைப் போலவே அவனும் அங்குமிங்கும் பார்த்தான். முதலில் மண்டை ஓடுதான் அவனுடைய கவனத்தையும் கவர்ந்தது. பிறகு, அங்கே முதல் நாள் இரவு நடந்த வாட்போரின் அறிகுறிகளைக் கவனித்தான். ஆங்காங்கு இரத்தக் கறை இருந்ததையும் பார்த்தான். உடல்கள் அங்கிருந்து இழுத்துச் செல்லப்பட்டிருக்கும் அடையாளங்களும் தெரிந்தன. இரத்தினங்கள் அவனுடைய கண்களில் பட்டதும், அவற்றை ஆவலுடன் கைகளில்

**அமரர் கல்கி**

திரட்டி எடுத்துக் கொண்டான். அந்த இரத்தினங்களைப் பார்த்தபடியே கலகலவென்று சிரித்தான்.

தன்னுடன் வந்த மற்றவர்களைப் பார்த்து, "பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று" என்றான். இன்னும் சிறிது நேரம் அவனும் மற்றவர்களும் ஏதோ பேசிக்கொண்டு நின்றார்கள். பிறகு, மாரப்ப பூபதி குதிரை மேல் ஏறினான். எல்லாக் குதிரைகளும் நாலுகால் பாய்ச்சலில் புறப்பட்டன.

மாரப்பனும் அவனுடைய ஆட்களும் போன பிறகு, ஒற்றர் தலைவன் தன் குதிரை இருந்த இடம் சென்று அதன் மேல் ஏறிக்கொண்டு, நேற்றிரவு தான் வந்த வழியிலே திரும்பிச் செல்லத் தொடங்கினான். குதிரை அக்காட்டுப் பாதையின் வளைவு ஒன்றைத் தாண்டியதும் உடம்பைச் சிலிர்த்தது. ஒற்றர் தலைவன் குதிரையை நிறுத்திச் சுற்றுமுற்றும் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் காணப்பட்ட ஒரு சிறு பாறைக்குப் பின்புறத்தில் கழுகுகள் வட்டமிடுவதைக் கண்டான். காட்டுப் பாதையில் கிடந்த உடல்கள் என்னவாயின என்னும் மர்மம் வெளியாயிற்று. தானும் இரத்தின வியாபாரியும் போன பிறகு, அங்கு வந்தவர்கள் அவ்வுடல்களை அப்புறப்படுத்தி, இந்தப் பாறை மறைவில் கொண்டுவந்து போட்டிருக்க வேண்டும். ஆனால், அவர்கள் யாராயிருக்கும்?

அவ்விடத்தில் அதிக நேரம் நிற்காமல் ஒற்றர் தலைவன் மேலே குதிரையை விட்டுக்கொண்டு சென்றான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மாமல்லபுரத்திலிருந்து காஞ்சிக்குப் போகும் இராஜ பாட்டையை அவன் அணுகினான். அவ்விடத்தில் அதே சமயத்தில் மாமல்லபுரத்திலிருந்து இராஜ பரிவாரங்கள் வந்து கொண்டிருந்தன. பரிவாரங்களுக்கு மத்தியில் குந்தவி தேவியின் பல்லக்கும் வந்தது. பல்லக்கின் பக்கத்தில் ஒரு கம்பீரமான வெண்புரவி மீது நரசிம்ம சக்கரவர்த்தியின் புதல்வன் மகேந்திரன் வீற்றிருந்தான்.

இதையெல்லாம் தூரத்திலேயே கவனித்துக்கொண்ட ஒற்றர் தலைவன், அவ்விடத்தில்,



குதிரையைச் சற்று வேகமாகவே தட்டி விட்டான். இராஜ பரிவாரங்களையோ, பரிவாரங்களுக்கு மத்தியில் வந்தவர்களையோ சற்றும் பொருட்படுத்தாதவனாய், அவர்களுக்குச் சற்று முன்னதாகவே இராஜபாட்டையின் சந்திப்பைக் கடந்து காஞ்சியை நோக்கிச் சென்றான்.

## 8. வேஷதாரி

ஒற்றர் தலைவன் அவ்விதம் இராஜ பரிவாரங்கள் வருவதைப் பொருட்படுத்தாமல் முன்னால் காஞ்சிப் பாதையில் சென்றதை குந்தவி, மகேந்திரன் இருவரும் கவனித்தார்கள்.

குந்தவியின் பல்லக்கும், மகேந்திரனுடைய குதிரையும் ஒன்றையொன்று ஒட்டியே சென்றுகொண்டிருந்தன.

மகேந்திரனுடைய தோற்றத்தில், குந்தவியின் மென்மையும் வனப்பும், நரசிம்மவர்மரின் கம்பீரமும் வீரமும் கலந்து பொலிந்தன. அண்ணனும் தங்கையும் அச்சாலையில் பவனி வந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது.

ஓர் ஆண்டு காலமாக நரசிம்மவர்மருடைய ஸ்தானத்தில் யுவராஜா மகேந்திரன் இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான். அப்படியிருந்தும் மேற்கூறிய குதிரை வீரன் இராஜ பரிவாரங்களைக் கண்டு ஒதுங்கி நிற்காமலும், மரியாதை செய்யாமலும் முன்னால் விரைந்து சென்றது எல்லோருக்குமே வியப்பை அளித்தது.



"அண்ணா! அதோ குதிரை மேல் போகிறானே அந்த வீரனைப் பார்த்தாயா? என்ன கம்பீரமான வடிவம்! அவன் யார் தெரியுமா?" என்று குந்தவி கேட்டாள்.

"எனக்குத் தெரியவில்லையே, தங்காய்! அவனுடைய தோற்றத்தில் இராஜ வம்சத்தின் களை காணப்பட்டது. நல்ல ஆஜானுபாகுவாகவும் தோன்றினான். அவன் குதிரையைப் பார்! இதற்குள் எவ்வளவு தூரம் போய்விட்டது!" என்றான் மகேந்திரன்.

"காஞ்சிக்குத்தான் போகிறான் போல் தோன்றுகிறது. ஒரு வேளை அயல் தேசத்தானோ, என்னமோ? இல்லாவிடில், இப்படி நம்மைக் கண்டும் நிற்காமல் போக மாட்டான். நாலு நாளைக்கு முன்பு துறை முகத்துக்கு வந்த கப்பலில் அயல் தேசத்தார் ரொம்பப் பேர் வந்து இறங்கியிருக்கிறார்கள். ஆகையினால்தான் தெரியாத முகங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன!" என்று குந்தவி சொன்னாள்.

"குந்தவி, செண்பகத் தீவின் இரத்தின வியாபாரியைப் பற்றிச் சொன்னாயே, அவன் வரவேயில்லையே?" என்றான் மகேந்திரன்.

"இல்லை" என்று சொன்னபோது, குந்தவியின் குரலில் மிகுந்த ஏமாற்றம் தொனித்தது.

"எப்படியும் காஞ்சி அரண்மனைக்கு அவன் வராமலா போய்விடுவான்? கண்டிப்பாக வருவான்."

குந்தவி இதற்கு ஒன்றும் மறுமொழி சொல்லவில்லை; மௌனமாயிருந்தாள். தன்னுடைய சந்தேகம் உண்மையாயிருக்குமானால், அவன் அரண்மனைக்கு வரமாட்டான் என்று எண்ணினாள்.

குந்தவியின் மனக்கண்ணின் முன்னால், மூன்று வருஷங்களுக்கு முன் காஞ்சிபுரத்து வீதியில் அவன்

பார்த்த சோழ ராஜகுமாரனுடைய முகமும், நேற்று மாமல்லபுரத்துத் தெருவில் சந்தித்த இரத்தின வியாபாரியின் முகமும் மாறி மாறித் தோன்றின. அவர்கள் இரண்டு பேரும் வெவ்வேறு மனிதர்களா? அப்படியானால், அந்த முக ஒற்றுமை மிகவும் அதிசயமான ஒற்றுமைதான்!

குந்தவியின் மௌனத்தையும், அவளுடைய முகவாட்டத்தையும் மகேந்திரன் கவனித்தான்.

''தங்காய்'' என்று அருமையாக அழைத்தான்.

''என்ன அண்ணா!''

''ஒரு மாதிரியாக இருக்கிறாயே, ஏன்?''

''ஒன்றுமில்லை, அண்ணா!''

''நான் ஒரு யோசனை செய்திருக்கிறேன், சொல்லட்டுமா?''

''சொல்லு, அண்ணா!''

''அப்பாவிடம் நான் சொல்லப் போகிறேன்; இந்தப் பல்லவ இராஜ்யத்தின் பாரத்தை அவர்தான் சுமக்க வேண்டும், என்னால் முடியாது என்று.''

''ஏன் அப்படிச் சொல்லுகிறாய், அண்ணா!''

''அவர் இருக்கும்போது நான் இராஜ்யம் ஆளுவது, சிங்கம் இருக்க வேண்டிய இடத்தில் பூனை உட்கார்ந்திருப்பது போல் இருக்கிறது! தேசத்தில் எல்லோரும் அப்படித்தான் நினைக்கிறார்கள்.''

''கிடையவே கிடையாது, அண்ணா!''

''அதோடு எனக்கு வேறொரு முக்கிய காரியமும் இருக்கிறது. இன்னொரு தடவை கடற்பிரயாணம் செய்ய வேண்டும்.''

''இலங்கைக்கு மறுபடியும் போகப் போகிறாயா?''

''இல்லை; செண்பகத்தீவுக்குப் போகப் போகிறேன்.''

''என்ன அண்ணா, சொல்கிறாய்?''

''ஆமாம், விக்கிரமனை மன்னிக்க வேண்டுமென்று அப்பாவிடம் கேட்கப் போகிறேன். பிறகு செண்பகத்தீவுக்கும் நானே போய் அவனை அழைத்து வரப் போகிறேன். தங்காய்! நான் இந்த நாட்டுக்குத் திரும்பி வந்து ஒரு வருஷம் ஆகிறது. இதுவரையில் ஒரு தடவையாவது நீ சிரித்து நான் பார்க்கவில்லை; உன் முகத்தில் சிரிப்பைப் பார்த்துவிட்டுத்தான் இனிமேல் வேறு காரியம் பார்ப்பேன்!'' என்றான் மகேந்திரன்.

இதைச் சொல்லும்போது, அவனுடைய நாத் தழுதழுத்தது; அவனுடைய தொண்டை அடைத்துக்கொண்டது.

குந்தவியின் கண்களில் நீர் ததும்பப் பார்த்தது. அவள் சற்றுநேரம் சும்மா இருந்து விட்டு, ''அப்பா சம்மதிக்க மாட்டார்!'' என்றாள்.




''நான் சம்மதிக்கச் செய்கிறேன். நேற்றே அப்பாவிடம் கேட்க வேண்டுமென்றிருந்தேன். இராத்திரி அவர் வரவேயில்லை. இன்று அவரை அவசியம் கேட்கப் போகிறேன்.''

''அப்பா சம்மதித்து நீ செண்பகத் தீவுக்குப் போனாலும் என்ன பிரயோஜனம்?''

''என்ன பிரயோஜனமா? எனக்கு ஒரு மைத்துனன் கிடைப்பானல்லவா?''

''அது நடக்காத காரியம், அண்ணா! அந்தக் கர்வம் பிடித்த சோழ ராஜகுமாரன், பல்லவர் குலப்பெண்ணை மணக்கச் சம்மதிக்க மாட்டான்!'' என்றாள் குந்தவி.

அப்போது மகேந்திரன் கலகலவென்று சிரித்தான். ''தங்காய்! எப்போதாவது உன்



உருவத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டதுண்டா?'' என்று கேட்டான்.

''போ, அண்ணா!'' என்றாள் குந்தவி.

''போகிறேன் தங்காய், போகிறேன். செண்பகத்தீவுக்குப் போய் அந்தச் சோழ ராஜகுமாரனைக் கட்டி இழுத்துக்கொண்டு வந்து உன் முன்னால் நிறுத்தி, கன்னத்தில் போட்டுக்கொள்ளச் சொல்லாவிட்டால் நான் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியின் பேரன் அல்ல!'' என்றான் யுவராஜா மகேந்திரன்.

குந்தவியும் மகேந்திரனும் காஞ்சியை அடைந்ததும், அரண்மனையில் அவரவர்களுடைய பகுதிக்குச் சென்றார்கள். குந்தவி தன்னுடைய அந்தப்புர அறைக்குள் பிரவேசித்தபோது, அங்கே சக்கரவர்த்தி வந்தால் உட்காருவதற்காகப் போட்டிருந்த ஆசனத்தில், வேற்று மனுஷன் ஒருவன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து அப்படியே ஸ்தம்பித்துப் போய்விட்டாள்! அந்த வேற்று மனுஷன், காட்டுக் குறுக்குப் பாதை வழியாக வந்து இராஜபாட்டையில் தங்களைத் தாண்டிச் சென்ற வீரன்தான் என்பது நினைவுக்கு வர ஒரு நிமிஷம் பிடித்தது. இதனால், அவளுடைய ஆச்சரியம் பன்மடங்கு பெருகியதோடு கோபம் பொங்கிற்று.

''யார் ஐயா நீர்? என்ன தைரியத்தினால் அந்தப்புரத்துக்குள் நுழைந்தீர்?'' என்றாள்.

''தேவி! பல்லவ சாம்ராஜ்யத்தின் ஒற்றர் தலைவன் நான். என் பெயர் வீரசேனன். தங்களிடம் ஒரு துப்பு விசாரிப்பதற்காக வந்தேன்!'' என்று அம்மனிதன் சொன்னதும், குந்தவியின் முகத்திலிருந்த கோபம் ஒரு நொடியில் குதூகலமாக மாறியது.

''அப்பா! இதென்ன வேடிக்கை!'' என்று கூச்சலிட்டுக்கொண்டே குந்தவி ஓடிப்போய் ஒற்றர் தலைவனுடைய தோள்களைக் கட்டிக்கொண்டு, அவனுடைய பொய் மீசையைக் களைந்தெறிந்தாள். அப்போது ஒற்றர் தலைவன் இருந்த இடத்தில் நரசிம்மவர்ம சக்கரவர்த்தி காட்சியளித்தார்.

''உங்களுடைய குரலைக் கொண்டுதான் அப்பா, கண்டுபிடித்தேன். இல்லாவிட்டால் அடையாளம் தெரிந்திராது. எப்படி அப்பா, இவ்வளவு நன்றாக வேஷம் போட்டுக் கொள்கிறீர்கள்?'' என்று குந்தவி கேட்டாள்.

''குழந்தாய்! என் தந்தை மகேந்திர சக்கரவர்த்தி எனக்குச் சொல்லிக் கொடுத்த வித்தைகளில் இதுதான் மிகவும் அருமையான வித்தை!'' என்றார் சக்கரவர்த்தி.

**''அப்பா இதென்ன வேடிக்கை!'' என்று கூச்சலிட்டுக்கொண்டே குந்தவி ஓடிப்போய், ஒற்றர் தலைவனுடைய பொய் மீசையைக் களைந்து எறிந்தாள்.**

**(தொடரும்)**

# கர்மா

ஒரு சக்கரத்துக்கு இரும்புப் பட்டை அடிப்பதென்றால், மாற்றி மாற்றிக் காய்ச்சியும் குளிர்ந்த ஜலத்தைக் கொட்டியும், மாற்றி மாற்றி விரிவடையவும் சுருங்கவும் பண்ணுவது வழக்கம். அப்போதுதான் அது சக்கரத்தை நன்றாகக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும். இல்லாவிட்டால், 'லொட லொட' என்று விட்டுப்போய்விடும். காய்ச்சி விரிவாக்கணும்; ஜலத்தைக் கொட்டிச் சுருங்கவும் பண்ணணும். இந்த மாதிரிதான் ஒரு ஜீவன் ஆத்ம ஸ்தானத்தைப் போய்க் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்றால், தர்மத்தின் பல கட்டுப்பாடுகளால், அதன் கீழான குணம் குறுகும்படியாகவும் பண்ணணும்; அன்பின் விசாலத்திலே அதன் மேலான குணம் விரியும்படியும் பண்ண வேண்டும்.

காரியமே இல்லாமல் ஆகிறதற்காகவே எத்தனையோ வகைவகையான கர்மாக்களை, சடங்குகளை, பொதுத் தொண்டுகளை நிறையப் பண்ண வேண்டும். தூக்கம் வரவில்லை என்று சொல்கிறவர்களிடம் என்ன சொல்கிறோம்? 'நன்றாக ஓடியாடி, உழைத்து வேலை செய். தானே அடிச்சுப்போட்ட மாதிரி தூக்கம் வரும்' என்கிறோமல்லவா? இது சரீர 'ரெஸ்ட்'டுக்கு மட்டும் சொன்னது. ஆத்மாவில் 'ரெஸ்ட்' ஆவதற்கும் கர்மா இப்படியே உபயோகமாகிறது.

இதே விதத்தில்தான் வெளி உணர்ச்சிகள் ஒன்றுமே இல்லாமல் ஆவதற்காகவே, ப்ரேமையை, அதன் முற்றிய ஸ்தானமாக பக்தி என்ற உணர்ச்சியை, நன்றாக வளர்த்துக்கொண்டு, அதில் ஆவேசம், பரவசம் என்கிற ஸ்திதிக்குப் போகவேண்டும். இப்படிப் பண்ணினால்தான் 'ஏகப் பேருணர்வு' என்கிறார்களே, அதில் கொண்டுவிடும். இப்படியில்லாமல் முதலிலேயே எல்லா உணர்ச்சியையும் போக்கிக் கொள்வது என்றால் முடியாது. அப்படி முடிந்தாலும் அது மரத்துப்போன மாதிரி உயிரில்லாத ஒரு வரட்டு நிலையில்தான் சேர்க்குமே தவிர ஏகப் பேருணர்விலே அல்ல.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்





"உங்க கதையை ஏன் திடீர்னு பாதியிலயே முடிச்சுட்டீங்க?"

"இல்லாட்டி என் கதையை முடிச்சுடுவேன்னு பல பேர் மிரட்டல் விட்டாங்க!"

- சீர்காழி வி.ரேவதி

"காதலிக்கு கர்சீஃப் வாங்கிக் கொடுத்தா லவ் கட் ஆயிடுமாமே...?"

"நீ வேற, நான் புடைவையே வாங்கிக் கொடுத்துட்டேன். ஒண்ணும் நடக்கலை!"

- சிக்ஸ் முகம்





"உட்கட்சிப் பூசலைச் சரிசெய்ய உயர்மட்டக் குழு ஒண்ணு வந்ததே என்னாச்சு?"

"அவங்களுக்குள்ளே அடிச்சுக்கறதுக்கே அவங்களுக்கு நேரம் சரியா இருக்கு!"

- லெ.நா.சிவகுமார்

# முட்டை போட்டுடாதீங்க சார்!

"பரீட்சைல எனக்கு முட்டை போட்டுடாதீங்க, சார்!"

"ஏன்டா என்ன விஷயம்?"

"மலைக்கு மாலை போட்டிருக்கேன் சார்."

- என்.எஸ்.பாலசுப்ரமணியன்



"நேத்து உன் தம்பிக்குப் பெண் பார்க்க குடும்பமா போனீங்களே, எப்படி?"

"வாயடைச்சுப் போயிட்டோம்!"

"பெண் அவ்வளவு அழகா?"

"இல்லே, அல்வா அவ்வளவு ஸ்ட்ராங்!"

- வெ.சீதாராமன்



"தினமும் ஒரு மணி நேரம் ஸ்விம்மிங் பண்ணுங்க. அது நல்ல எக்ஸர்ஸைஸ். உடல் இளைக்கும்."

"போங்க சார். திமிங்கலம், சுறா... எல்லாம் தினமும்தான் நீச்சல் அடிக்குது. குண்டாத்தானே இருக்கு."

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்



# கவனிக்கப்பட வேண்டிய கன்னி முயற்சி!

தமிழில் திரைப் பாடல்களுக்குக் கிடைக்கும் மரியாதையும் கிராக்கியும், ஏன் தனி ஆல்பமாக உருவாக்கப்படும் பாடல்களுக் குக் கிடைப்பதில்லை என்பது யோசிக்க வேண்டிய விஷயம்.

இசையாலும் வரிகளாலும் அந்தப் பாடல்கள் பல மடங்கு திரைப் பாடல் களைவிடச் சிறப்பாகவே இருக்கின்றன. ஆயினும், வெகுஜன மக்களின் ஏகோபித்த பாராட்டை ஏன் அவற்றால் பெற முடிவ தில்லை? எனக்குத் தோன்றுவது இதுதான்: 'மக்களிடம் போதிய அளவு இந்த ஆல்ப முயற்சிகள் அறிமுகப்படுத்தப்படுவதில்லை.'

விளம்பரப்படுத்தினாலும் வியாபார வெற்றியை முன்வைத்துச் செயல்பட இய லாது என்றே, ஆல்பத்தைத் தயாரித்து வெளியிடுபவர்கள் நினைக்கிறார்கள். இந்தியிலும் ஆங்கிலத்திலும் இந்தக் குறையில்லை.

தனி நபரின் ஆர்வத்தால் உருவாகும் ஆல்பங்களைக் காட்சிப்படுத்தி, திரைப் படத்தில் பயன்படுத்தினால், நல்ல பாடல் களை மக்கள் கேட்கும் வாய்ப்பு ஏற்படும். அப்படி, சமீபத்தில் வெளிவந்து என் ரச னையை மொத்தமாய்க் கவர்ந்த தனி ஆல்பம் சாஷ்வதியின் 'சாஷ்வதம்'.

லால்குடி ஜி.ஜெயராமனின் சிஷ்யை யான சாஷ்வதியின் குரலும் இசையும், தொலைந்து போயிருந்த சாஸ்த்ரிய இசை நுகர்வை மீட்பது போல அமைந்திருக் கின்றன. பாடல்களில் தேர்ச்சியும் புலமையும் வெளிப்படும் விதமாக வரிகளும் ஈர்க்கின்றன. பிருந்தாவும் இந்துவும் தம் மெட்டுக்குச் சொல் வடிவம் கொடுத்ததாகக் கூறும் சாஷ்வதி, பாடல்களை எது பிருந்தா எழுதியது, எது இந்து எழுதியது என குறிப்பிட்டிருந் தால் இன்னும் சிறப்பாய் இருந்திருக்கும்.

மொத்தம் பன்னிரண்டு பாடல்கள். ரகத்துக்கு ஒன்றாக பாம்பே ஜெயஸ்ரீ, பத்மா சங்கர், கார்த்திக் ஆகியோருடன் சாஷ்வதி யும் பாடியிருக்கிறார்.

*'நம்மை வாழ வைப்பது / முகத்தில் உதிக்கும் / சிரிப்பல்லவோ?'*

- என்ற கடைசிப் பாடலை இசையோடு கேட்கையில் மெல்லிய சிரிப்பு மெய்யா கவே மலர்ந்து விடுகிறது. சாஷ்வதியின் இசைக்கான பாராட்டுப் போல. அதே மாதிரி, பரவசக் குரலில் எப்பவும் வசீகரிக் கும் பாம்பே ஜெயஸ்ரீயின் 'ஆசைகள் என் நெஞ்சில் வருதே' பாடல்

*கண்பட்டுப் போனது / எந்தன் கண்ணே / மனம்விட்டுப்போனது / உந்தன் பின்னே / பேசும் வார்த்தை எல்லாம் / கனிமொழி கவிதையாகும்*

ராக ஆலாபனைகளால் இரத்த நாளங் களை இலேசான பரவச பரவலுக்குப் பயணப்படுத்தும். சாஷ்வதியின் 'சாஷ்வதம்' கன்னி முயற்சிதான் என்றாலும் கவனிக்கப்பட வேண்டிய முயற்சி.



யுகபாரதி

## டைரிகளில் ஒரு நட்சத்திரம்




# கைக்குள் ஒரு ஜோதிடர்!

"சில வருடங்களுக்கு முன்னால் ஒரு கம்பெனியில், 'ரொம்பப் புதுமையாக இருக்கிறதே' என்று சொல்லி 250 ஆஸ்டிரோ டைரிகளுக்கு ஆர்டர் கொடுத்தார்கள். அடுத்த வருடம் 500 டைரிகளுக்கு ஆர்டர் வந்தது. அப்புறம் 1000. அடுத்த வருடம் 2500. இதோ இந்த வருட ஆர்டர் 6000... ஏராளமான பன்னாட்டு நிறுவனங்கள் எங்கள் ஆஸ்டிரோ டைரியைத் தம் பெயர் பொறித்து, வாங்கிச் சென்று தம்முடைய வாடிக்கையாளர்களுக்கு வழங்குகின்றன" என்று பெருமையுடன் கூறுகிறார் கல்பனா திலீப் குமார். இவரது 'தீபா டைரீஸ் அண்ட் காலண்டர்ஸ்' நிறுவனம்தான் ஜோதிட அறிவியல் பூர்வமாக உருவாக்கப்பட்ட ஆஸ்டிரோ டைரிகளையும், காலண்டர்களையும் வெளியிட்டு வருகிறது.

**வ**ழக்கமாக டைரி என்றால் ஒவ்வொரு நாளுக்கும் ஒரு பக்கம் இருக்கும். சிலவற்றில் மாதக் காலண்டர், மற்றும் சில விவரங்களும் இருக்கும். ஆனால், எங்கள் ஆஸ்டிரோ டைரி கையில் இருந்தால், கூடவே ஒரு ஜோதிட நிபுணர் இருப்பதற்குச் சமம். பலர் வீட்டில் பஞ்சாங்கம் இருக்கும். ஆனால், அதில் குறிப்பிடப்பட்டுள்ள நாழிகை கணக்கிடுவது எப்படி என்று தெரியாது. அந்தச் சிரமங்கள் எதுவும் இல்லாமல், ராகுகாலம், எமகண்டம் தொடங்கிக் குறிப்பிட்ட ராசி, நட்சத்திரம் சேர்ந்தவர்கள் ஒவ்வொரு நாளும் எந்த விதமான பணிகளைச் செய்தால் வெற்றிகரமாக முடியும் என்பது வரை ஏராளமான தகவல்கள் இடம் பெற்றுள்ளன. இதுபோன்ற அனைத்து அஸ்டிராலஜி விவரங்களும் கொண்ட டைரியை இதுவரை வேறு யாரும் வெளியிட்டதில்லை" என்கிறார் கல்பனா.

இரண்டு சைஸ்களில் ஆஸ்டிரோ டைரி வெளியிடப்படுகிறது. பெரிய சைஸ் ரூ.300/-, சிறியது ரூ.175/- டைரியைப் போன்றே ஏராளமான தகவல்கள்கொண்ட 'ஆஸ்டிரோ காலண்டர்'களையும் நாற்பது ரூபாய் விலையில் வெளியிடுகிறார்கள்.

தொடர்புக்கு : 98413 03713

சந்திப்பு : **கௌதம் ராம்**

• ஜெயா



• சுந்தர்



• பிரபு



அடுத்த தலைமுறை

# நம்பிக்கை தரும்

**ராகசுதா, கிருஷ்ணகான சபா, ஹம்சத்வனி - சென்னையின் மதிக்கப்படும் சபாக்கள். மூன்றிலும் புதிய தலைமுறை பொறுப் பேற்றுள்ளது. இவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?**

**எஸ்**.வி.கிருஷ்ணன் காலமானதும் 'ராக சுதா' நிகழ்ச்சிகள் நடத்துவது நின்று போய்விடும் என்றுதான் பலரும் நினைத்தார்கள். ஆனால் மகள் ஜெயா, தகப்பனார் வழியில் சபாவை நடத்தி வருகிறார்.

''கச்சேரி ஏற்பாடு செய்வதை நான்தான் பார்த்துக்கொள்கிறேன். ஹால் மேனேஜ்மென்டை அம்மாவும், தம்பியும் கவனித்துக் கொள்கிறார்கள். அப்பா, இளம் கலைஞர்களைத் தொடர்ந்து ஊக்கப்படுத்தினார். சீனியர்ஸ்ல, வேதவல்லி, டி.கே.கோவிந்தராவ், செங்கல்பட்டு ரங்கநாதன், வீணை வெங்கட்ராமன், கல்பகம் சுவாமிநாதன் எல்லோருமே அப்பாவின் விருப்பமான வித்வான்கள். அதனால், ஆர்ட்டிஸ்ட்டுகளின் ஆதரவு எனக்கும் தொடர்ந்து கிடைத்து வருகிறது.

டிசம்பர் சீசனில் அப்பா போட்ட மாதிரியே கச்சேரிகள் ஏற்பாடு செய்திருக்கிறேன். டி.என்.கிருஷ்ணன் சார் போன் பண்ணி, 'இப்போ என்ன பண்ணுறே?' என்று கேட்டபோது ஏற்பாடுகளைச் சொன்னேன். 'அப்படியா? எழுதிக்கோ என் பெயரை... என்ன தேதி கொடுக்கறே?' என்று உரிமையுடன் கேட்டார்.

அடுத்த வருஷம் ஜனவரியிலிருந்து பாலசரஸ்வதியின் பேரன் அனிருத் நைட் இங்கே டான்ஸ் கிளாஸ் நடத்தப் போகிறார். இதுவும் இரண்டு வருடம் முன்பு, அப்பா இருந்தபோதே ஏற்பாடான விஷயம்தான்!''என்றார் ஜெயா.

**கி**ருஷ்ணகான சபா செயலர் யக்ஞராமன் மறைவுக்குப் பிறகு, பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் மகன் பிரபு கூறுகிறார்:

''அப்பா இருந்த

போது எந்தெந்த நிகழ்ச்சிகள் எல்லாம் வருடம் முழுதும் நடத்தி வந்தாரோ, அதில் எதையும் விடாமல் தொடர்ந்துகொண்டி ருக்கிறோம்.

அப்பா, சீனியர் வித்வான்களுக்கு நன்றாக வாசிக்கக் கூடிய, வளர்ந்து வரும் பக்க வாத்தியக் கலைஞர்களைப் போடுவார். நான் அதை ரிவர்ஸ் பண்ணி, இளைய தலைமுறை கலைஞர்களுக்கு சீனியர் வித்வான்களைப் போட்டிருக்கிறேன். மாஸ்டர் பாலமுரளி கிருஷ்ணாவுக்கு உமையாள்புரம் சிவராமன் மிருதங்கம். சாகேத ராமனுக்கு விட்டல் ராமமூர்த்தி வயலின், ஸ்ரீமுஷ்ணம் ராஜாராவ் மிருதங்கம், ஸ்ரீவல்சன் மேனனுக்கு லால்குடி விஜயலட்சுமி வயலின், குருவாயூர் துரை மிருதங்கம். இப்படிப் புதிய 'காம்பினேஷன்'கள்! இவை எல்லாமே பிற்பகல் இரண்டு மணி கச்சேரிகள். மெயின் ஹாலில். எல்லோரும் வந்து கேட்க வேண்டும் என்பதற்காகவே அந்த 'ஸ்லாட்' கொடுத்திருக்கிறேன். இது ஒரு புது பரிசோதனை.

# வாரிசுகள்!

அப்பா, எல்லா வருஷமும் நாட்டிய கலா கான்ஃபரன்சில் ஏதாவது புதுமை செய்வார். நான் இந்த வருடம் டான்ஸ் ஸ்கூல் பாடகர்கள், பாடகிகளை கருத்தரங்கில் கலந்துகொள்ளச் செய்திருக்கிறேன்.

புரந்தரதாசரிலிருந்து பாபநாசம் சிவன் வரை வாக்கேயகாரர்களின் முக்கியமான படைப்புகள் பற்றி, காலையில் சீதா ராஜன், எஸ்.ஆர்.ஜானகிராமன், வேதவல்லி, சுகுணா புருஷோத்தமன் போன்ற சீனியர் கலைஞர்கள் நிகழ்ச்சிகள் நடத்தப் போகிறார்கள்'' என்று அடுக்கிக்கொண்டே போகிறார் பிரபு.

'ஹம்சத்வனி' ராமச்சந்திரன் அடையாறு பகுதி ரசிகர்களுக்காகவே சபாவை ஆரம்பித்து, ஏராளமான உறுப்பினர்களைச் சேர்த்து வெற்றிகரமாக நடத்தி வந்தவர். அவருக்குப் பிறகு, மகன் சுந்தர் பணியைத் தொடர்கிறார்.

''அப்பா இருந்தபோது அவரே தொடங்கியதுதான் செம்மங்குடி நூற்றாண்டு விழா நிகழ்ச்சி. குரு - சிஷ்ய சீரிஸ், பரம்பரை சீரீஸ் எல்லாம் அவர் ஐடியாதான். அதைத் தொடர்ந்து நடத்தப் போகிறேன். செம்மங்குடி சென்டினரியை நாம்தான் நடத்த வேண்டும் என்று திட்டம் போட்டு, அதற்காக நிதிகூட ஒதுக்கி வைத்திருந்தார்.

சபாவுக்கு என்று ஒரு தனிக் கட்டடம் வேண்டும் என்பது அவருடைய விருப்பமாக மட்டுமல்ல, பல ரசிகர்களின் ஆசையாக இருந்தது. அந்த விஷயத்தில் அரசாங்கத்துடன் பேசி முயற்சிகள் எடுத்து வருகிறேன்.

அவர் இருக்கும்போதே துணைச் செயலராக நான் இருந்ததால், சபா செயல் முறைகளில் ஓரளவு பரிச்சயமும், கலைஞர்களுடன் தொடர்பும் இருந்தது. பிற உறுப்பினர்களும் பக்கபலமாக இருக்கிறார்கள்.

சங்கீதம் கேட்க இளைய தலைமுறையினரை வரச் செய்வது அப்பாவின் நோக்கம்! அதை நிறைவேற்ற நான் தொடர்ந்து பாடுபடுவேன்'' என்கிறார் சுந்தர்.

**- சாருகேசி**

# கல்கி ராஜேந்திரன்



✱ மணியம்



✱ சந்திரா

என்னிடம் உள்ள பழைய கல்கி இதழ்கள் பழுப்பேறிக் கொண்டிருக்கின்றன. தொட்டால் பொடித்துப்போகும் அளவுக்குப் பழசாகிவிட்டன. கல்கி தொடங்கி அறுபத்தாறு ஆண்டுகள் ஆகிவிட்டன அல்லவா! ஆரம்ப நாட்களில் கல்கி கிருஷ்ணமூர்த்தியே பல புனைபெயர்களிலும் பெயரே குறிப்பிடாமலும் எழுதி, பக்கங்களை நிரப்பி வாசகர்களைக் கவர்ந்திருக்கிறார். இன்னும் ராஜாஜி, டி.கே.சி., உ.வே. சுவாமிநாத அய்யர், க.சந்தானம், ஏ.கே. செட்டியார், சிதம்பர ரகுநாதன்... பட்டியல் நீளும். இவற்றுள் பல கதை - கட்டுரைகள் புத்தக வடிவம் பெற்றுள்ளன. இருப்பினும் படங்களுடன் 'கல்கி'யில் முதலில் வெளியான நிலையிலேயே, முக்கியமான கதை - கட்டுரைகளை மட்டுமேனும் பாதுகாக்க விருப்பம். அதற்கு விஞ்ஞான வளர்ச்சி உதவுகிறது. கம்ப்யூட்டர், ஸ்கேனர், சி.டி. ரைட்டர், பிரிண்ட்டர் எல்லாம் கணிசமான தொகை தந்து வாங்கினேன். ஒவ்வொரு இதழாக ஸ்கேன் செய்து, பழுப்பை வெளுப்பாக்கி, 'ஸேவ்' பண்ணி, பிறகு மொத்தமாக மூன்று மாத இதழ்களை ஒரு சி.டி.யில் அடக்கி... எதிர்காலத்தில், முக்கியமான கதை, கட்டுரைகளுக்கு (அதாவது என் நோக்கில் முக்கியமானவை) அட்டவணை தயார். இதற்கு என் பேத்தி கௌரி உதவி வருகிறாள்.

கல்கி தொடங்கிய முதல் இதழிலிருந்தே உதவி ஆசிரியர் ஸோமஸ்கந்தன் எழுதி வந்திருக்கிறார். சாமா படம் போட்டிருக்கிறார். டி.கே.சி.யின் கம்பர் தரும் காட்சிக்கு ஆர்யா சித்திரம் வரைந்திருக்கிறார். ஐந்தாவது இதழில் சிதம்பர ரகுநாதனின் அசுவமேத யாகம் சிறுகதைக்கு முதன்முதலாக மணியம் படம் போட்டிருக்கிறார்.

அப்போது மணியம் 'ஸ்கூல் ஆஃப் ஆர்ட்ஸ்'-ஸில் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தார். படம் போட்டு எடுத்து வந்து கல்கியிடம் காண்பிப்பார். அப்பாவுக்குப் பிடித்துப் போயிற்று. ''என்ன பண்ணின்டிருக்கே'' என்று கேட்டிருக்கிறார். ஸ்கூல் ஆஃப் ஆர்ட்ஸில் படித்துக்கொண்டிருப்பதாகத் தெரிய வந்ததும், ''அதை விட்டுட்டு 'கல்கி'யில் வந்து சேர்ந்துடு'' என்று அப்பா கூற, மணியம் திகைத்துப் போயிருக்கிறார்.

இரண்டு காரணங்கள். ஒன்று, இவ்வளவு சுலபமாக ஒருவர் கூப்பிட்டு, வேலை கொடுப்பார் என்று மணியம் எதிர்பார்க்கவேயில்லை. இன்னொன்று, ஓவியப் பயிற்சியைப் பாதியில் நிறுத்துவதா என்ற தயக்கம். டிப்ளமா வாங்கிவிட வேண்டாமா?

''என்ன யோசனை?'' என்றார் அப்பா.

''கோர்ஸ் முடிய இன்னும் ஒரு வருஷம் தான் இருக்கு.''

''என்ன பெரிய கோர்ஸ்... அங்கே சொல்லித் தர்றதைவிட இங்கே இன்னும் நீ நிறைய கத்துக்கலாம்!''

மணியம் அந்தக் கணமே தம்மை கல்கியிடம் முழுசாக ஒப்படைத்துக்கொண்டார்.

கல்கி தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றினார். மணியத்திடம் புதைந்துகிடந்த ஆற்றலை வெளிப்படுத்தி, மெருகேற்றி ஜொலிக்க வைத்தார். சிவகாமியின் சபதம்

# மணியம் - சந்திரா
## போட்டா போட்டி!




* வடநாட்டு யாத்திரையின்போது தந்தையுடன் சிறுவனாக கல்கி ராஜேந்திரன்; அவருக்குப் பின்னால் ஓவியர் சந்திரா

எழுதும் சமயம் அஜந்தா - எல்லோரா போனபோது மணியத்தை உடன் அழைத்துச் சென்றார். மாமல்லபுரத்துக்கு மீண்டும் மீண்டும் போனார். தாம் நாலு நாட்களிலேயே திரும்பிவிட்டாலும், அங்கெல்லாம் மணியத்தை நாலு வாரம் தங்கி இருக்கச் செய்தார். அங்குள்ள கலைப் பொக்கிஷங்களை மணியம் சித்திரங்களாக்க, அவற்றை தீபாவளி மலர்களில் பிரசுரித்தார். இலங்கையில் சிகிரியா, பொலன்னருவா, கண்டி, அனுராதபுரம் என்று பொன்னியின் செல்வன் கதைமாந்தர் சென்ற இடங்களுக்கெல்லாம் அப்பாவைத் தொடர்ந்து மணியம் போய் வந்தார். தமிழ்நாட்டில் தஞ்சை, பழையாறை, கோடிக்கரை, கங்கைகொண்ட சோழபுரம், மதுரை, குற்றாலம், தென்காசி... மணியம் போகாத இடமில்லை; காணாத கோயில் இல்லை; பிரதி எடுக்காத உன்னத சிற்பமில்லை. இதனால், ஓவியர் மணியம் ஓவியமேதை மணியம் ஆனார். முதல் கல்கி தீபாவளி மலர் தொடங்கி, வரிசையாக கல்கி தீபாவளி மலர் மேலட்டைகளை நோட்டம்விட்டால் போதும், மணியத்தின் வளர்ச்சி எத்தகையதெனக் கணிக்கலாம்.

மணியத்தின் அபார வளர்ச்சிக்கு கல்கி தவிர இன்னொரு காரணமும் உண்டு. அது, ஓவியர் சந்திராவுக்கும் அவருக்கும் இடையே நிலவிய ஆரோக்கியமான போட்டி. சந்திராவை வளர்த்தவரும் கல்கிதான். ஓவியர் சந்திரா மகாத்மா காந்திஜியைக் கோட்டுச் சித்திரமாக்கி எடுத்துக்கொண்டு







* சந்திரா - மணியம் கைவண்ணத்தில்...

வந்து கல்கியிடம் காண்பித்தார். அந்தப் பொக்கை வாய் சிரிப்பைப் பார்த்ததும் கல்கிக்கு ஒரே சந்தோஷம். உடனே வேலை போட்டுக் கொடுத்துவிட்டார். ஆனால், பெரும்பாலும் சந்திராவைக் கதைகளுக்குப் படம் வரையவே பயன்படுத்தினார். எலிஃபெண்டா குகைகளுக்குச் சென்று, அங்கிருந்த சிற்பங்களை சந்திரா வரைந்தளித்தது விதிவிலக்கு. சந்திராவின் படைப்பில் அவை சிற்பங்களாகவே காணப்படும். ஓவியர் மணியத்தின் கோயில் சிலை வடிவங்கள், சிற்பச் சித்திரங்களாகப் பரிமளிக்கும்.

சந்திரா பார்ப்பதற்கு அழகாயிருப்பார். களையான முகம். அந்தக் கால சினிமா ஸ்டார் டி.ஆர்.மகாலிங்கம் சாயலில் காணப்படுவார். பாவ பூர்வமாகப் படங்கள் போடுவதில் மன்னன். சிவகாமியின் சபதம் புத்தக வடிவம் பெற்றபோது - முதல் கல்கி காரியாலயப் பதிப்பு - வண்ணப்படங்களுடன் அற்புதமாகத் தயாராயிற்று. அதில் பல்வேறு கதாபாத்திரங்களின் குண இயல்புகள், அப்படியே முகத்தில் பிரதிபலிப்பதுபோல, சந்திரா வரைந்த வண்ண ஓவியங்கள் பொக்கிஷமாகப் பாதுகாக்கப்பட வேண்டியவை.

கல்கியின் 'அலை ஓசை'க்கு சந்திரா வாராவாரம் படம் வரைந்து வந்தார். மோகினித் தீவு தொடருக்கு மணியம். பொன்னியின் செல்வன் தொடங்கியபோது கல்கி, சந்திராவை அழைத்துவிட்டார். அவரும் இரண்டு அறிவிப்புகள் அழகிய படங்களுடன் தயாரித்து, ஒப்புதல் பெற்று இரண்டு இதழ்களில் கல்கியில் வெளியாயிற்று.

மணியம் கல்கியிடம் வந்தார். அவர் கண்கள் கலங்கியிருந்தன.

"என்ன? என்ன?" என்றார் கல்கி

"அலை ஓசை பெரிய நாவல்; தொடர்ந்து பல வருஷங்கள் அதற்கு சந்திரா படம் வரைந்திருக்கிறார். 'பொன்னியின் செல்வன்'

**“போடா! போடா! நீயுமாச்சு; உன் அப்பாவுமாச்சு!” என்று விரட்டினார் ஓவியர் சந்திரா.**

பெரிய நாவலாக திட்டமிட்டிருக்கிறீர்கள். அடுத்து அதற்கு நான்தானே படம் வரையணும்?" என்று கேட்டார் மணியம். அவர் நா தழுதழுத்துவிட்டது.

கல்கி அவரை மேலும் கீழுமாகப் பார்த்தார். "சரி, அட்டைப்படம் போட்டுக் கொண்டு வா", என்று குந்தவையும் வந்தியத்தேவனும் பழையாறையில் சந்திக்கும் காட்சியை விவரிக்க ஆரம்பித்துவிட்டார்.

இப்படித்தான் மணியம், பொன்னியின் செல்வனுக்குப் படம்போட ஆரம்பித்து பெரும் புகழ்பெற்றது. கல்கியின் கதாபாத்திரங்களுக்கு ஓர் உருவம் தந்து வாசகர்கள் மனத்தில் உலவச் செய்தார்.

இது நடந்த மறுநாள் நான் கல்கி காரியாலயத்துக்கு ஏதோ காரியமாகப் போயிருந்தபோது ஓவியர் சந்திரா, "தம்பி, இங்கே வா" என்று என்னை அழைத்தார். மேஜையை நான் நெருங்கியதும், "போடா! போடா! நீயுமாச்சு; உன் அப்பாவுமாச்சு! போ போ!" என்று விரட்டினார்.

இப்படி அழைத்து-விரட்டியது என்னை ரொம்பப் பாதித்துவிட்டது. வீடு திரும்பி அப்பாவிடம் வருத்தப்பட்டுக் கொண்டேன்.

"போனால் போறது போ! அவன் கோபப்பட்டதிலும் ஒரு நியாயம் இருக்கு. மனசுல வைச்சுக்காதே; மறந்துடு. எப்பவும் போல அவனிடம் பழகு. சரியாயிடுவான்" என்றார் அப்பா.

(பேசுவோம்)

## வாரம் ஒரு பாசுரம்

# தேடி எடுத்த உவமைகள்!

—சுஜாதா

'கதிர் பொறுக்குகை' என்ற ஒரு சொல்வழக்கு உண்டு. இதை மணவாள மாமுனிகள் பயன்படுத்தியுள்ளார். திருமாலுக்கு உவமையாக மேகத்தைச் சொல்ல நினைத்து, அது போதாமல் மேலும் மேலும் உவமைகளை அடுக்கிக்கொண்டே செல்லும் செயலுக்கு, 'கதிர்பொறுக்குதல்' என்று சொல்வதுண்டு.

பெரியாழ்வாரின் இந்த அழகான பாசுரம் இதற்கு ஓர் உதாரணம் :

''குன்று ஆடு கொழு முகில்போல்
குவளைகள் போல் குரை கடல் போல்
நின்று ஆடு கணமயில் போல் நிறம்
உடைய நெடுமால் ஊர்;
குன்று ஊடு பொழில் நுழைந்து
கொடியிடையார் முலை அணவி
மன்று ஊடு தென்றல் உலாம் மதில்
அரங்கம் என்பதுவே.''

மலைமேல் உள்ள மேகம்போல, குவளைமலர் போல, ஒலிக்கும் (குரை) கடல் போல, நின்று ஆடுகின்ற அழகான மயில் போன்ற திருமாலின் ஊர் எது? சோலைகளில் நுழைந்து, கொடிபோன்ற இடையுள்ள பெண்களின் மார்பைத் தொட்டு (அணவி), மன்றத்தில் ஊடாடும் தென்றல் உலவும் மதில்கள் சூழ்ந்த திருவரங்கம் என்பது.

பெரியாழ்வாரின் எட்டாம் திருமொழியில் இந்த அழகான பாசுரம் வருகிறது. ஒரு தேர்ந்த கவிஞருக்கு உவமைக்குப் பஞ்சமே இருக்காது. ஓர் உவமையோடு நிறுத்தமாட்டார். மாலின் கரிய நீல நிறத்தை எங்கெல்லாம் பார்க்க முடியுமோ, அங்கெல்லாம் சட்டென்று அவர் மனம் செல்கிறது. மேகம், குவளை மலர், கடல், மயில் இப்படி...

'கதிர்பொறுக்குகை' என்பது கதிர்களைத் தேடி எடுத்தல். உவமைகளைத் தேடி எடுத்து நமக்கு அளிக்கிறார்.

(படிக்கலாம்)




பாகம் – 2

மின்னல் கதைகள்

# ஞானம்!

''டேய், நந்து. நமக்கு முன் வரிசையிலே அரக்குக் கலர் சுரிதார் போட்டுண்டு இருக்காளே, அவதாண்டா கிருத்திகா. ஜாதகம் அம்சமா பொருந்தி இருக்கு. மீட் பண்ணிப் பேசறியா?''

சந்தனக் குழம்பு நிறம்; மீன் கண்கள்; சங்குக் கழுத்தில் மெல்லிய செயின்; காதில் ஊஞ்சலாடும் குடை ஜிமிக்கிகள்.

''வேண்டாம்மா.''

''ஏண்டா? கிளி மாதிரி இருக்காளேடா.''

''என்ன பிரயோஜனம்? பக்கத்திலே இருக்கிற அவ அப்பாவைக் கவனிச்சியா? தூங்கி வழியறார். இப்போ பாகவதர் என்ன ராகம் பாடினார்னு சொல்லு.''

''ஏன்? தோடி. பாட்டு கத்தனுவாரி...''

''தோடி கன ராகம். அதுகூட அந்தப் பொண்ணுக்குத் தெரியலே. ரேஸ் புக் மாதிரி கையிலே இருக்கிற

ஜே.எஸ். ராகவன்

# வாசிக்க மாட்டார்!



*சமையல் அறையில் வேலையாக இருக்கிறாள் கௌரி அம்மாள்.*

*''பாத்தீ... பாத்தீ... இந்த ஸ்டோரி புக்கை வாசிக்கக் காட்டறயா?''*

*பேத்தி ஷ்ரேயாவின் மழலையைக் கேட்டு கௌரி மகிழ்ந்து போனாள்.*

*''வாசிக்கன்னுகூட உனக்குச் சொல்லத் தெரியுமா என் செல்லம்! நான் உனக்கு மம் பண்ணிண்டு இருக்கேனோல்யோ. அதோ தாத்தா வந்துட்டார் பாரு. அவரை வாசிக்கச் சொல்லு.''*

*''என்ன பாத்தி சொல்றே? நான் லேடிதானே?''*

*''ஆமாம்; லட்டு மாதிரி லேடிதான்? ஏன்? எதுக்குக் கேக்கறே.''*

*''லேடிக்கெல்லாம் தாத்தா வாசிக்க மாட்டாராமே. எனக்கு எப்படி வாசிப்பார்?''*

*பெண்களுக்கு வாசிக்க மாட்டேன் என்ற கொள்கையையுடைய மிருதங்க வித்வான் சிலையாக நிற்கிறார்.*



# விழிப்பு!

திருவண்ணாமலையில் கார்த்திகை தீபம் பார்த்துவிட்டு, மலையை வலம் வந்த பின், மிகுந்த களைப்புடன் வேலூருக்குச் செல்லும் பேருந்தில் ஏறி அமர்ந்து, டிக்கெட் எடுத்ததும் தூங்க ஆரம்பித்தேன்.

''சார்... மேலே சாயாமல் தூங்குங்க!'' சக பயணி கூற, நான் அரைகுறையாக விழித்தபடி ''சாரி என்று மீண்டும் தூங்க ஆரம்பித்து, அவர் மீது சரிய ஆரம் பித்தேன்.

முதல் மூன்று முறை வரை பொறுமை



புஸ்தகத்தைப் பாத்துத் தெரிஞ்சுண்டு தலையை ஆட்டிக்கறா. எனக்குத் தேவை அழகு மட்டும் இல்லேம்மா; ஆழ்ந்த சங்கீத ஞானம்கூட...''

யாகச் சொன்னவர், நான்காவது முறை வரும்போது, ''யோவ்! அறிவில்லே உனக்கு? எத்தனை முறை சொல்றது...'' என்ற திட்டைக் கேட்டதும், வலுக்கட்டாயமாக என் தூக்கத்தைக் கலைத்தேன்.

வண்டி போளூரில் நிற்கவே, இறங்கி டீ அருந்தி மீண்டும் அமர்ந்தேன். ஜன்னலோரக் குளிர் காற்றில் இப்போது சக பயணி என் மீது சாய்ந்து தூங்கவே... நான் அமைதியாயிருந்தேன்!

பேருந்து வேலூரை அடைய அதன்பின் ஒரு மணி நேரமாயிற்று. வேலூரில் வந்து அவரை எழுப்பினேன்.

எழுந்தவர், ''சாரி சார்! நீங்க அப்பவே என்னை எழுப்பியிருக்கலாமே...'' எனக் கேட்க,

''பாதித் தூக்கத்திலிருப்பவரை எழுப்புவதைவிடப் பாவச் செயல் உலகில் எதுவுமில்லை'' என்று பொட்டிலடித்தாற்போல நான் கூற,

அவர் முழித்தபடி நின்றார்.

**வெ. ராம்குமார்**

நாற்காலியில் உட்கார்ந்தவாறே காலையில் படிக்கவிட்ட செய்திகளை அன்றைய தினசரியில் படித்துக்கொண்டிருந்தார் ராமநாதன்.

''சார்!'' என்று குரல் கேட்டு நிமிர்ந்தார். ஆறு மாதங்களுக்கு முன்பு, கல்லூரியில் பீஸ் கட்ட வசதியில்லை என்று நிதி உதவி கேட்டு வந்த மாணவன் ரவி. தனி ஒருவரால் அவ்வளவு தொகை கொடுக்க முடியாததால் தன்னால் முடிந்ததைக் கொடுத்துவிட்டு, தனக்குத் தெரிந்த நண்பரின் சங்கம் மூலம் நிதியுதவி கிடைக்க ஏற்பாடு செய்தார். நண்பரும் பணத்தை வழங்கி விட்டுத் தொலைபேசி மூலம் ராமநாதனுக்குத் தெரிவிக்க, அவரும் உடனே மகிழ்ச்சியுடன் தன் நன்றியைக் கூறினார். ஆனால், ரவி மட்டும் இப்போதுதான் இங்கே எட்டிப் பார்க்கிறான்.

'சரி! பணம் கிடைத்ததற்கு நன்றி சொல்லிவிட்டுப்போக வந்திருக்கிறான் போலிருக்கு. நாளானாலும் பரவாயில்லை' என்று ஆறுதல் படுத்திக்கொண்டார் அவர்.

வந்தவன் கையில் சில பேப்பர்கள். அதை அவரிடம் நீட்டினான். அடுத்த செமஸ்டருக்குப் பண உதவி கேட்டு எழுதி இருந்தது!

# மனிதர்கள்!

**ஆர். சாரதா**



## சேவை

# நட்சத்திரங்கள்

கரூர் மாவட்டம், தோகை மலை அருகே உள்ளது உப்புக்காச்சிப்பட்டி கிராமம். சிங்கப்பூர் என்.சி.சி. மாணவர்கள் அங்குதான் தங்கியிருந்து திருச்சி ஜோசப் கல்லூரி என்.சி.சி. மாணவர்களு டன் இணைந்து, கட்டட வேலையில் ஈடுபட்டிருந்தனர்.



''முதன்முறையா இப்ப தமிழ் நாட்டுக்கு வந்திருக்கேன். சிங்கப் பூர்ல என்னோட அப்பா - அம்மா ரெண்டு பேரும் உணவுப் பொருள் வியாபாரத்துல இருக்காங்க. நல்ல வசதியான குடும்பம். தமிழ்நாட் டில் கிராமங்களோட அமைதி எனக்கு மிகவும் பிடிச்சிருக்கு. ஆனா, இந்த மக்களோட ஏழ்மையைத்தான் என்னால தாங்கிக்க முடியலை. பார்க்கவே மனசுக் குக் கஷ்டமா இருக்கு. சிங்கப்பூர்ல இந்த மாதிரி ஒரு கிராமத்தைக் கூட நீங்க பார்க்க முடியாது.

இங்கே நகரவாசிகளோட தினசரி வாழ்க்கைக்கும், கிராம மக்களோட தினசரி வாழ்க்கைக்கும் இடையே பெரிய இடை வெளி இருக்கு. அந்த இடைவெளி குறைய ணும்'' என்கிறார் சிங்கப்பூர் மாணவர் முஹமத் ஃபாமி.

''தமிழ்நாட்டுக்கு வந்து பால்வாடி கட்டடப் பணியில் ஈடுபட்டதால, ஒரு வீடு கட்டுவது எப்படி என்பதைத் தெரிந்து

‘இந்த மக்களோட ஏழ்மையைத்தான் என்னால தாங்கிக்க முடியலை. பார்க்கவே மனசுக்குக் கஷ்டமா இருக்கு. சிங்கப்பூர்ல இந்த மாதிரி ஒரு கிராமத்தைக்கூட பார்க்க முடியாது.’

கொண்டேன். இந்தக் கிராமத்துக் குழந்தைகளைப் பார்க்க ரொம்ப ஆசையா இருக்கு. மாலையில், அந்தக் குழந்தைகளோட கொஞ்ச நேரம் விளையாடுவேன். சிங்கப்பூர்ல இரவு நேரங்களில் வானத்தில் நட்சத்திரங்கள் தெரிவதில்லை. இங்கு நல்லாத் தெரியுது. இதுக்காகவே நள்ளிரவு நேரங்கள்ல மொட்டை

# தெரிவதில்லை!







மாடிக்கு வந்து நட்சத்திரங்களை ரசிக்கப் பார்ப்பேன்'' என்று கூறுகிறார் மாணவி ஜெய்னீஸ் தன் இங்கியா.

''செப்பர்டு எனப்படுவது திருச்சி ஜோசப் கல்லூரியின் விரிவாக்கத் திட்டத் துறை. அது தொடங்கப்பட்டு இருபத்தியொரு ஆண்டுகள் ஆகின்றன. திருச்சி, கரூர், புதுக்கோட்டை மாவட்டங்களில் இது வரை எழுபத்தியிரண்டு கிராமங்களைத் தத்தெடுத்து சேவை செய்து வருகிறது செப்பர்டு. எங்களுக்கும், சிங்கப்பூர் என்.சி.சி. மாணவர்களுக்கும் இடையே உருவான புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் அடிப்படையில் மூன்றாவது ஆண்டாக இங்கு வந்திருக்கின்றனர் சிங்கப்பூர் மாணவர்கள். கிராமப் புறங்களில் பாலர் பள்ளிக் கட்டடம் என்பது, மிகவும் அடிப்படைத் தேவைகளில் ஒன்றாகும். இதுவரை இருபத்திநான்கு கிராமங்களில் பால்வாடிக் கட்டடம் கட்டித் தந்திருக்கிறோம். சிங்கப்பூர் மாணவர்கள் எங்களுடன் இணைந்து கட்டித் தரும் மூன்றாவது பால்வாடிக் கட்டடம் இது!'' எனச் சொல்கிறார் திருச்சி ஜோசப் கல்லூரியின் விரிவாக்கத் திட்டத்துறையான செப்பர்டு இயக்குநர் அருட்தந்தை எம்.எலியாஸ்.

செய்திச் சித்திரம் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# என்றும் பௌர்ணமி!

தமிழக ஆளுனர் மேதகு சுர்ஜித் சிங் பர்னாலா அவர்களுக்குத் தீர்க்க முடியாத ஒரு குறை! 1942 ஆகஸ்டு போராட்டத்தில் பங்குகொண்ட அந்தத் தேசபக்தர், அன்றையத் தலைமுறைத் தலைவர்களான காந்திஜி, நேருஜி, சர்தார் படேல், மௌலானா அபுல் கலாம் ஆஸாத் முதலிய பெருந்தலைவர்களைப் பார்த்தும், அவர்கள் பேசக் கேட்டும் இருக்கிறார்; ஆனால், ராஜாஜியைப் பார்த்ததே கிடையாது!

அண்மையில் ராஜாஜி நினைவுச் சொற்பொழிவு நிகழ்த்திய ஆளுனர், மேற்படி குறையை வெளியிட்ட பிறகு ராஜாஜி பற்றித் தாம் படித்தும் கேட்டும் அறிந்த பல விஷயங்களைக் கூறினார். அவற்றுள் ஒன்று: ராஜாஜி மேற்கு வங்க கவர்னராகப் பதவி ஏற்றபோது அந்த மாகாணத்தில் ஹிந்து - முஸ்லிம் கலவரங்கள் உச்சத்தை அடைந்திருந்தன. ராஜாஜி எடுத்த நடவடிக்கைகள், மக்களிடம் பேசிய பாங்கு ஆகியவற்றின் காரணமாகக் கலவரங்கள் உடனே ஓய்ந்தன. 'ஹிந்துக்களும் முஸ்லிம்களும் வேறு வேறு மதத்தினர்தான். ஆனால், அவர்களிடம் உள்ள தார்மிகப் பண்புகள் வெவ்வேறானவை அல்ல; ஒன்றேதான். மனிதப் பண்புகளிலேயே மிக உயர்வானது மன்னிப்பதும் மறப்பதும்தான்' என்றார் ராஜாஜி. வங்கதேச மக்கள் நெகிழ்ந்து போயினர்.

ராஜாஜி அறக்கட்டளை நிறுவி, ஆண்டுதோறும் படிப்பிலே சிறந்து விளங்கும் ஆதி திராவிட ஏழை மாணவர்கள் இருவருக்கு, கல்வி தொடர உதவித் தொகைகள் அளித்து வருகிறார் ராஜாஜியின் கொள்ளுப்பேரன் சி.ஆர்.கேசவன். இந்த உதவித் தொகைகளை வழங்கிய பின் ராஜாஜி பற்றி பர்னாலா பேசியதையெல்லாம் கேட்டபிறகு, மேதகு ஆளுனர் ராஜாஜியை அவரது வாழ்நாளில் சந்திக்காமலே போய்விட்டதால் ஒன்றும் பாதகமே யில்லை என்றுதான் தோன்றியது. ராஜாஜியை அந்த அளவுக்கு ஆளுனர் சரியாக எடைபோட்டு அறிந்து வைத்திருக்கிறார்.

இதே நிகழ்ச்சியில் சிறப்புச் சொற்பொழிவாற்றினார் முன்னாள் பிரதம கண்காணிப்பு ஆணையர் விட்டல். 'விஜிலன்ஸ் விட்டல்' என்றே அவர் பதவிக் காலத்தில் பலரால் குறிப்பிடப்பட்டவர். ராஜாஜியின் குணநலன்கள் பலவற்றைப் பட்டியலிடுவதைவிட, ஓர் அம்சத்தை வலியுறுத்தினாலே போதும் என்ற நோக்கில் பேசினார். அந்த ஓர் அம்சம்: நேர்மையின் சிகரமாக அவர் விளங்கியதுதான். அந்த நேர்மையை அறிவாற்றலில் நேர்மை; தார்மிக நேர்மை; பொருளாதார நேர்மை என்று பகுத்துப் பார்த்தார் விட்டல்.

இன்று 'சரியான முடிவு', 'அரசியல் ரீதியில் சரியான முடிவு' என்று இருவிதமாகப் பார்ப்பது சகஜமாகிவிட்டது. ஆனால், ராஜாஜியின் 'அறிவாற்றல் நேர்மை' இதற்கு இடம் தந்ததில்லை. இதனால்தான் காந்திஜியிடம்கூட கருத்து மாறுபாடு கொள்ளும்படி ராஜாஜிக்கு நேர்ந்திருக்கிறது. இத்தகையவர்கள் மட்டுமே அரசியல்வாதி என்ற நிலையிலிருந்து உயர்ந்து அரசியல் ஞானியாக விளங்குகிறார்கள்.



# திறந்தது

* 'புவனா ஒரு கேள்விக்குறி' படத்தில் ரஜினியுடன் சிவகுமார்...

**ப**ல நாடகக் குழுக்கள் தங்களுடைய நாடகங்களைப் பார்க்க வரும்படி என்னை அழைப்பதுண்டு. நானும், அவர்களின் அழைப்பை ஏற்று செல்வேன். நாடகம் பற்றிய எனது கருத்துகளை மேடையிலோ, அல்லது அதன் பிறகு நாடகக் குழுவினருடனோ நான் பகிர்ந்துகொள்ளுவேன். அவர்களில் பலர், சினிமா மீது கொண்ட ஆர்வம் காரணமாகத்தான் நாடகத்தில் நடிக்க வருகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆகையால், மேடையில் திறமையாக நடிப்பவர்களை நான் மனம் திறந்து பாராட்டத் தவறியதில்லை.

அப்படி நான் பாராட்டிய சில நடிகர்கள் அடுத்த சில நாட்களில் என்னைச் சந்தித்து, நான் பாராட்டிக் கூறியதை நினைவுகூர்ந்து, ''எனக்கு சினிமாவில் நடிக்க ஆசை... வாய்ப்புக் கொடுங்கள்'' என்று கேட்பார்கள். அவர்களிடம், ''நீங்கள் என்னிடம் வாய்ப்புக் கேட்டு வரவேண்டிய அவசியமே இல்லை. என் படத்தின் கதாபாத்திரங்களுக்குப் பொருத்தமாக இருப்பீர்கள் என்றால், நானே உங்களை வரவழைத்து வாய்ப்பைக் கொடுப்பேன்!'' என்று சொல்வேன்.



சினிமாவில் நடிக்க வேண்டும்; கதாசிரியர் ஆக வேண்டும்; டைரக்டர் ஆக வேண்டும் என்ற கனவுடன் இன்று தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்து, கோடம்பாக்கத்துக்கு ஏராளமான இளைஞர்கள் படை எடுக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் நான் ஒரே ஒரு விஷயத்தைத்தான் சொல்ல விரும்புகிறேன்: 'நடிப்பாக இருந்தாலும் சரி, எழுத்தாக இருந்தாலும் சரி அல்லது வேறு எந்த ஒன்றாக இருந்தாலும், அதற்கான திறமை உங்களிடம் இருக்கிறதா? எதிர்நீச்சல் போட்டு வெற்றி பெற முடியும் என்பதை உறுதியாக முடிவு செய்துகொண்டு வாருங்கள். அதை முழுமையான ஈடுபாட்டுடன், வெளிப்படுத்துங்கள்; மேலும் மேலும் அந்தத் திறமையினை மெருகூட்டிக் கொள்ளுங்கள். உரிய நேரத்தில் வாய்ப்பு உங்

எஸ்.பி.முத்துராமன்

களைத் தேடி வரும்.

நடிகரும், இயக்குனருமான விசு, பல அற்புதமான மேடை நாடகங்களை வழங்கியவர். அவரது நாடகங்களின் வசனங்களில் நகைச்சுவை தெறிக்கும். அதே சமயம் அழுத்தமான விஷயங்களையும் சொல்லிச் சிந்திக்கவும் வைப்பார். அவர், சினிமா உலகில் வாய்ப்புக் கொடுங்கள் என்று யாரையும் கேட்டதில்லை. அவரது திறமை




யைப் பார்த்து இயக்குனர் பாலச்சந்தர் அவருக்கு வாய்ப்பளித்தார். விசு, தம் திறமையினை

# கோட்டைக் கதவு!



* அபூர்வ ராகங்கள் படத்தில்.

வெளிப்படுத்தி, இன்று புகழ் பெற்ற நடிகராக, கதாசிரியராக, வசன கர்த்தாவாக, இயக்குனராக விளங்குகிறார். வெங்கட்டின் நாடகத்தைப் பார்த்துத்தான் அவரை 'நிம்மதி உங்கள் சாய்ஸ்' சின்னத்திரைத் தொடருக்கு எழுத வைத்தோம். இன்று அவர் இயக்குனராகவும் பரிமளிக்கிறார்.

இன்று சின்னத்திரையில் ஏராளமான சீரியல்களுக்குக் கதை - வசனம் எழுதிக் கொண்டிருப்பவர் தேவிபாலா. அவர் சின்னத்திரையில் வாய்ப்புக் கொடுங்கள் என்று யாரிடமும் சென்று கேட்டது இல்லை. சுமார் முன்னூறு நாவல்களை அவர் எழுதி இருக்கிறார். அந்தத் திறமையும், அனுபவமும்தான் அவருக்குச் சின்னத்திரையில் எழுதுவதற்கு வாய்ப்புகளைப் பெற்றுக் கொடுத்துள்ளன.

சினிமாவில் நடிக்கும் இலட்சியத்துடன்

பெங்களூரிலிருந்து சென்னை வந்த ரஜினி, யாரிடமும் சென்று வாய்ப்புக் கேட்கவில்லை. சினிமாவில் நடிப்பதற்கு ஆர்வம் மட்டும் இருந்தால் போதாது என்று கருதி, தம்முடைய நடிப்புத் திறமையினை வளர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் நடிப்புப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். ஒரு நாள் அங்கே வந்த இயக்குனர் கே.பாலச்சந்தர் அவர்களின் அறிமுகம் கிடைத்தது. இயக்குனர் பாலச்சந்தர் தமது மனத்தில் பதிந்த புதுமுகங்களை மறக்கமாட்டார். சில மாதங்கள் கழித்து, அபூர்வ ராகங்கள் படத்தில் ஒரு சிறு ரோலில் நடிக்கும் வாய்ப்பு ரஜினியைத் தேடி வந்தது. பெரிய கதவுகளைத் திறந்து கொண்டு உள்ளே நுழையும் காட்சியில் ரஜினி அறிமுகமானார். அந்தக் குறிப்பிட்ட



* விசு

தமிழ்த் திரையுலகம் என்ற கோட்டையை, ரஜினி திறந்துகொண்டு வந்ததற்கான அடையாளமாகவே அக்காட்சி இப்போது தோன்றுகிறது.

காட்சியில், ரஜினி கதவைத் திறந்து கொண்டு உள்ளே வருவார். தமிழ்த் திரையுலகம் என்ற கோட்டையை, ரஜினி திறந்து கொண்டு வந்ததற்கான அடையாளமாகவே அக்காட்சி இப்போது தோன்றுகிறது!

ரஜினியுடன் நான் இணைந்து பணியாற்றிய முதல் படம் 'புவனா ஒரு கேள்விக் குறி'. அது நாவலாக வெளியான போது, அதைப் படித்துவிட்டு இது சினிமாவுக்கு ஏற்ற நல்லதொரு கதை என்று முடிவு செய்து, சேலத்திலிருந்த கதாசிரியர் மகரிஷியை சென்னைக்கு வரவழைத்து உரிமை வாங்கினோம். தமிழில் கதாநாயகனாக நடித்துக் கொண்டிருந்த சிவகுமாரை வில்லனாகவும், வில்லனாக அறியப்பட்டிருந்த ரஜினியைக் கதாநாயகனாகவும் ஒப்பந்தம் செய்தோம். நானும், பஞ்சு அருணாசலமும் விஷப் பரீட்சையில் இறங்குவதாக எச்சரித்தார்கள் சிலர். ஆனாலும் எங்கள் முடிவினை நாங்கள் மாற்றிக் கொள்ளவில்லை. ஏன்? அதற்கு ஓர் அழுத்தமான காரணம் இருந்தது.

(பயணம் தொடரும்)

எழுத்து வடிவம்: **எஸ்.சந்திரமௌலி**

(ரசிகர்மன்ற ராஜாக்கள் அடுத்த வாரம்)

# எவனோ ஒருவன்

அநியாயத்தைக் கண்டு நகர்ந்து செல்பவர்கள் மத்தியில், கொதித்தெழுந்து குரலுயர்த்துபவன்தான் எவனோ ஒருவன். இரண்டு ரூபாய் அதிகம் கேட்ட கடைக்காரனைப் பின்னியெடுத்துவிட்டு, ஐம்பது ரூபாய் இனாமாய் தந்து அனாதைச் சிறுவனை ஆஸ்பத்திரிக்குப் போகச் சொல்லும் மாதவனின் பாத்திரப் படைப்பு ரொம்பவே அலாதியானது. லஞ்சம் தருவதாய்ச் சொல்லும் கஸ்டமரைக் கலாய்ப்பது, 'டியூஷன் வெச்சாத்தான் பாஸாவான்னா, குழந்தையை ஸ்கூலுக்கு அனுப்பாம நேரா டியூசனுக்கே அனுப்பு' என்று வெடிப்பதென உக்ர தாண்டவம்! நோ பார்க்கிங்கில் நிறுத்தப்பட்ட வண்டி, ஏழைகளைக் கவனிக்காத டாக்டர் என்று தேடித் தேடி மாதவன் களையெடுக்கும்போது சராசரி ரசிகனின் கரவொலிகளைக் கச்சிதமாய் வாங்கி விடுகிறார் இயக்குநர்.

அக்ரஹாரத்து ஏழை மனைவியை அப்படியே பிரதிபலிக்கிறார் சங்கீதா. நியாயத்தைக் கட்டிக்கொண்டு அழும் கணவனின் கையாலாகாத்தனம் கண்டு குமுறும்போது கன்னத்தில் அறையும் நடிப்பு! என்கவுண்ட்டர் போலீஸ் அதிகாரியாக வரும் சீமான், சிறப்பான கவனத்துக்குரியவர்.

பாடல்களே இல்லாத குறையை சமீரின் பின்னணி இசை நிறைவு செய்துவிடுகிறது. முதல் முறையிலேயே அழுத்தமான வசனங்களைப் பதிவுசெய்து அசத்தியிருக்கிறார் மாதவன். சஞ்சய் ஜாதவின் ஒளிப்பதிவு, யதார்த்தமான வாழ்வியலை கண்முன் நிறுத்துகிறது. இயக்குநர் நிஷிகாந்த்துக்கு தமிழில் இது முதல் படம். அருமையான கதை, அளவான திரைக்கதை என்று நேர்த்தியாகச் செய்திருக்கிறார். தொலைக்காட்சிப் பேட்டிகள், மக்கள் மாதவனை ஹீரோவாகப் பேசுவது போன்ற சலித்துப்போன காட்சிகளுக்குத் தடா போட்டிருந்தால், இன்னமும் அழுத்தமான பதிவாக இருந்திருக்கும், என்றாலும் 'எவனோ ஒருவன்' நம்மில் ஒருவனே!

– ரேவதி

# விழிப்புணர்வுக் கதை 8

"உலகத்திலே பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒரு கடமை உண்டு. உன் கடமையிலிருந்து நீ தவறியிருக்க! அது என்னன்னு யோசிச்சுப் பாரு, உனக்கே புரியும். அதை சரி பண்ணிட்டால், உன் பிரச்னை சரியா யிடும்'' என்றார் என் ஒன்றுவிட்ட சித்தப்பா.

என்னவோ தெரியவில்லை, கொஞ்ச காலமாய் மனதிலும், வீட்டிலும் குழப்பம். பையனுக்குச் சரியாக வேலை அமைய வில்லை. பெண்ணுக்கு எதிர்பார்த்த கல்லூரியில் சீட் கிடைக்கவில்லை. மனைவியோ சிடுசிடுக்கிறாள். இவை யெல்லாம் என் வேலையில் பிரதிபலிக்க, அலுவலகத்திலும் சண்டை, ப்ச்!

உறவினர் வீட்டுத் திருமணத்தில், சித் தப்பா குசலம் விசாரித்தபோது, அழுது விட்டேன். அப்போதுதான் அவர் இப்படிச் சொன்னார்.

கல்யாண வீட்டிலிருந்து தாம்பூலப் பையுடன் கிளம்பியபோதே, மனசுக்குள் குருவி சுத்த ஆரம்பித்துவிட்டது.

சித்தப்பா சொன்ன கடமை என்ன என்று வெள்ளை வேட்டியின் கரும்புள்ளி யாய் தெரிந்துவிட்டது.

வீடு திரும்பியதும் மனைவி கேட்டாள்.

''என்ன ஒரு மாதிரி இருக்கீங்க?''

''அம்மா ஞாபகம்'' என்றேன்.

**நா**ன்கு வருடங்களுக்கு முன் கோபித் துக் கொண்டு வெளியே போய்விட்டாள் அம்மா.

வழக்கமான மாமியார், மருமகள் சண் டைதான். நான் மெல்ல, மெல்ல வலியவர் கட்சியான என் மனைவி பக்கம் சாய்ந் தேன்.

ஏதோ ஒரு சண்டையில் உச்சத்தில் கத்திவிட்டேன்.

''இதோ பாரும்மா, எனக்கு நிம்மதி வேணும்னா, ஒண்ணு நீ தொலையணும், இல்லை நான் தொலையணும்'' என்றேன்.



அம்மா என்னை வெறித்துப் பார்த்தபடி சற்று நேரம் நின்றாள். வெளியே போய் விட்டாள், மொத்தமாய்.

முதலில் மனதுக்குக் கஷ்டமாய் இருந்தது.

''இப்பத்தான் நீங்க ஒரு நல்ல புருஷனாய் நடந்துக்கிட்டீங்க'' என்று பாராட்டிய மனைவியின் முந்தானையில் மன உறுத்தலை மறந்தேன்.

அங்குமிங்கும் அலைந்து, முடிவில் அம்மா ஒரு முதியோர் இல்லத்தில் அடைக்கலம் ஆன விவரம் அறிந்ததும், கொஞ்ச நஞ்சமிருந்த தயக்கமும், குற்ற உணர்வும் என்னிடமிருந்து ஓடிப்போனது.

''சித்தப்பா சொத்தப்பான்னு ஏன் புதுக் குழப்பம்?'' என்றாள் என் மனைவி, கலக்கமாய். மௌனமாய் இரண்டு நாட்கள் ஓடின.

அன்று அலுவலகம் விட்டு வந்து, டிபன் சாப்பிடும்போது மனைவி சொன்னாள்...

''பெரியவரு உங்க சித்தப்பா சொன்னதுலேயும், ஏதாவது அர்த்தம் இருக்கும்.''

தோசையை வாயில் போடப்போன நான், நிறுத்திவிட்டு, அவளை வியப்புடன் பார்த்தேன்.

''நம்ம குழந்தைங்க நல்லா இருக்கணும்னா, எல்லாத்தையும் கேட்டுக்கிட்டுத்தானே ஆகணும். அதுக்காக, வீட்டுக்கே கூட்டிட்டு வந்துடப் போறீங்களா?''

தர்மசங்கடமான அமைதியில் டிபன், காபி முடிந்தது. எங்கள் மகன் இன்னும் வீடு திரும்பவில்லை. மகள் உள் அறையில் படித்துக்கொண்டிருந்தாள். டி.வி.யில் ஏதோ சீரியல் ஓடிக் கொண்டிருந்தது.

''ஏங்க, மாசாமாசம் பணமாய் அந்த முதியோர் இல்லத்துக்கு உங்க அம்மா பெயரில் அனுப்பிச்சுடுங்களேன்''

சந்நியாசம் வாங்கிண்ட பின்னாடியும் அம்மாவுக்குச் செய்யவேண்டிய கடமையைப் பூர்த்தி செஞ்சார், ஆதிசங்கரர்.

# கீறல்!

கிருஷ்ணா

என்றாள்.

யாருக்கும் பிரச்னையில்லாத முடிவாய்த்தான் பட்டது.

அந்த வாரக் கடைசியிலேயே, பேருந்தைப் பிடித்து முதியோர் இல்லம் இருக்கும் ஊருக்குச் சென்றேன்.

**ஊ**ர் சுத்தப் பட்டிக்காடுதான். ஆனால், பேருந்து வசதி இருப்பதால், சௌகரியக் குறைச்சல் ஏதுமில்லை. பேருந்து நிறுத்தத்திலிருந்து பத்து நிமிட நடையில் இருந்தது அந்த இல்லம். மாமரமும், தென்னையும், வாழையுமாய் குளிர்ச்சியாயிருந்தது.

நிர்வாகியைச் சந்தித்தேன்.

"சந்நியாசம் வாங்கிண்ட பின்னாடியும் அம்மாவுக்குச் செய்ய வேண்டிய கடமையைப் பூர்த்தி செஞ்சார், ஆதிசங்கரர். இப்ப உள்ள மனுஷங்களைத் திருத்த அவர் மீண்டும் ஜனனம் எடுத்தால்தான் உண்டு" என்று மென்மையான குரலில், என் மேல் ஈட்டியைப் பாய்ச்சினார்.

விதியே என்று கேட்டுக்கொண்டு நின்றேன்.

"மாதம் ஒரு முறை வேனில், இந்த இல்லத்தில் இருக்கறவங்களைக் கூட்டிக்கிட்டு கோயில், குளம்னு போறது வழக்கம் சார். இன்னிக்கும் பக்கத்து ஊரு கோயிலுக்குத்தான் போயிருக்காங்க. சின்னப் பசங்க மாதிரி முகத்துல மலர்ச்சியோட, கேலியும் சிரிப்புமாய் அவங்க எல்லோரும் போன அழகு இருக்கே, அடடா!" என்றார் நிர்வாகி.

அவர்கள் இல்லம் திரும்ப நேரமாகும் என்று சொன்னதால், பணக் கவரை மட்டும் கொடுத்துவிட்டு, ஊர் திரும்பினேன்.

பிறகு, மாதா மாதம் பணத்தை 'செக்'காய் அனுப்பி, என் கடமையைச் செய்து வந்தேன். வீட்டிலும் கொஞ்சம் பிரச்னைகள் குறைந்தது போலத்தான் தோன்றியது.

செக் கிடைத்ததும், நிர்வாகி நன்றி தெரிவித்து கடிதம் எழுதுவார். கிட்டத்தட்ட ஒன்றரை வருடங்கள் ஓடிப்போனது.

அந்த மாதம் முதியோர் இல்ல நிர்வாகியிடமிருந்து கடிதம் வராமல் போகவே, தொலைபேசியில் தொடர்பு கொண்டேன்.

"நிர்வாகி வெளியூர் போயிருக்கார். பத்து நாளாச்சு. நாளைக்குத் திரும்பிடுவார். யாருங்க, சுந்தரியம்மாவா? சிவப்பாய், ஒல்லியாய் இருப்பாங்களே, அவங்களா? அவங்க இறந்துபோய் ஏழு மாசம் போல ஆச்சுங்களே" என்றான் போனை எடுத்த ஆள்.

திகைத்துப் போனேன். நிர்வாகியிடமிருந்து வரும் ஒவ்வொரு கடிதத்திலும் அம்மா நலமாயிருப்பதாகத்தானே எழுதி



நெஞ்சம் அம்மாவின் எழுத்துக் கீறலால் வலிக்க, மௌனமாய் வீடு திரும்பினேன்.

## மீண்டும் மணி

**கொ**ஞ்ச நாட்களாக நடிக்காமலிருந்த கவுண்டமணி, மறுபடியும் சத்யராஜோடு இணைந்து லொள்ளு செய்யத் தயாராகிவிட்டார். 'தங்கம்' படத்தில்தான் இருவரும் இணைகிறார்கள். அண்மையில் பொள்ளாச்சியில் நகைச்சுவைக் காட்சி ஒன்றைப் படமாக்கியபோது, இருவரின் லொள்ளில் யூனிட்டே கலகலப்பாகி விட்டதாம். "இந்த ரசனை படம் முழுவதும் தொடரும்" என்கிறார் டைரக்டர் கிச்சா. "பெரியார் படத்துக்குப் பிறகு வம்பான வேடங்களில் சத்ய ராஜ் நடிக்க மாட்டேன்" என்றாரே என்று கேட்

டால், ''கதைதான் காரணம். நிஜமாவே தங்கம்தான் அவரு. எல்லாவிதமான கேரக்டர்ஸும் பண்ணக்கூடிய இந்திய நடிகர்கள்ல சத்யராஜ் சாரும் ஒருவர். இன்னைக்கும் யங்ஸ்டார்ஸ் அவரோட பெர்ஃபார்மென்சைப் பார்த்து மெரண்டு போறாங்க. இந்தப் படத்திலும் மிரட்டியிருக்கார்'' என்கிறார்.

**- தேவா**



யிருந்தார். போன மாதம்கூட கடிதம் வந்ததே!

மனதை எதுவோ பிசைய, மறுநாளே நேரில் புறப்பட்டுவிட்டேன்.

போனில் பேசியவன் தவறாய்ப் புரிந்து கொண்டிருப்பானோ?

**மு**தியோர் இல்லத்தின் அலுவலகத்தினுள் நுழையும்போது படபடப்பாய்த்தான் இருந்தது.

நிர்வாகி சேரில் அமர்ந்திருந்தார். ஊரிலிருந்து திரும்பிவிட்டார். நல்லதாய் போயிற்று.

''சார்...'' என்று நான் ஆரம்பிக்க, சைகையால் சுவரைக் காண்பித்தார்.

அங்கு என் அம்மாவின் படம் ஃப்ரேம் செய்யப்பட்டு, மாலையிடப்பட்டிருந்தது.

''இறந்தவங்களோட படத்தை இப்படி மாட்டி ஒரு வருஷம் அஞ்சலி செலுத்தறது, இந்த இல்லத்தோட வழக்கம். கடைசி மூச்சை இங்கேயே விடற எல்லோருக்கும் இந்த ஒரு வருஷ பூஜையும், மரியாதையும் உண்டு'' என்றார்.

சட்டென எனக்குள் கோபம் வெடித்தது.

''நீங்க... ஒரு ஏமாற்றுக்காரர்'' என்றேன் ஆத்திரத்தில் வார்த்தை வெடிக்க!

அமைதியாய் ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினார். ''உங்க அம்மா எழுதினது'' என்றார். படித்தேன்.

மகனுக்கு,

ஆசிகள்... இந்த இல்லத்தின் நிர்வாகி எனது வற்புறுத்தலின் பேரில்தான், நான் இறந்ததை உன்னிடம் சொல்லவில்லை. ஒரு தாயாய் என் கடமையைச் செய்தேன்.

ஒரு மகனாய் நீ என்ன செய்தாய் என்பது உனக்கே தெரியும்.

கடமையைச் செய்யாதவனுக்கு, உரிமையும் இல்லை.

ஏதோ ஒரு பரிகாரமாய், நீ திடீரென பணம் அனுப்புவதாய் எனக்குத் தோன்றியது. நீ அனுப்பும் பணம், நிஜமாகவே இந்த இல்லத்துக்குத் தேவை. அது மூலம் உனக்கும் புண்ணியம் கிடைக்கும். நான் இறந்துவிட்டது அறிந்தவுடன், நீ பணம் அனுப்புவதையும் நிறுத்திவிடுவாய் என உணர்ந்து, நிர்வாகியிடம் மன்றாடிக் கேட்டுக்கொண்டேன்.

என் இறப்பைப் பற்றித் தகவல் ஏதும் உனக்குத் தரவேண்டாம் என்று சத்தியம் வாங்கிக்கொண்டேன்.

உங்கள் எல்லோருக்கும் ஆசிகள்.

இப்படிக்கு,

அம்மா.

**நெ**ஞ்சம் அம்மாவின் எழுத்துக் கீறலால் வலிக்க, மௌனமாய் தவித்தபடி வீடு திரும்பினேன். நான் என்ன செய்ய வேண்டும் என்றும் புரிந்தது.

அடுத்த மாதமும், எனது காசோலை வந்து சேர்ந்தது என்று முதியோர் இல்லத்தின் நிர்வாகி கடிதம் எழுதி, நன்றி தெரிவித்திருந்தார். ●

இந்த ஆண்டும் களை கட்ட வருகிறது 'சென்னை சங் கமம்'. அதன் ஒருங்கிணைப் பாளர் அருட்தந்தை ஜெகத் காஸ்பரைச் சந்தித்தோம்.

''சென்றமுறை 'சென்னை



✱ ஜெகத் காஸ்பர்

# நோக்கத்தில் தெளிவாக இருக்கிறோம்!

## –ஜெகத் காஸ்பர்

சங்கமம்' நிகழ்ச்சி நடத்திய அனுபவத்தில், இந்த முறை பல விஷயங்களை மேம் படுத்தியிருக்கிறோம். தமிழக அரசின் ஒத்துழைப்புடன் இரண்டாயிரம் கிராமப் புறக் கலைஞர்கள் இந்த முறை சென்னையைக் கலக்க வருகிறார்கள்'' என் றார் உற்சாகமாக.

ஜெகத் காஸ்பருக்குச் சொந்த மண் குமரி மாவட்டம். பள்ளிப் படிப்பை அங்கு முடித்துவிட்டு, சென்னை பூந்தமல்லியில் உள்ள இறையியல் கல்லூரியில் பட்டம் பெற்றவர். பின்னர் மீடியா மேல் காதல் வரவே, மாஸ் கம்யூனிகேஷனில் பட்ட மேற்படிப்பு முடித்திருக்கிறார். ஃபிலிப் பைன்ஸில், ஒலிபரப்பு நிறு வனத்தில் சில ஆண்டுகள் பணிபுரிந்து, பிறகு குட்வில் கம்யூனிகேஷன்ஸ் நிறுவனத் தைத் துவக்கினார். சென்னை யில், கனிமொழி மற்றும் கலை ஆர்வமுள்ள தொழில் அதிபர்கள் சிலரை ஒருங் கிணைத்துத் துவக்கப்பட்ட தமிழ் மையம், இசை மற்றும் கலைகளை மக்களிடம் கொண்டுசேர்க்கும் பணியை மேற்கொண்டிருக்கிறது. அதில் குறிப்பிடத்தக்க பணி, இளைய ராஜாவை வைத்து திருவாசகம் சிம்பனி யைக் கொண்டு வந்தது.

''லால்குடியின் வித்வத்தைச் சிறப்பிக்க வும் தமிழ் மையம் தன் பணியைச் செய்துள்ளது. அவரது தேர்ந்தெடுக்கப் பட்ட வாசிப்புகளை லால்குடி மார்க்கம் என்று தொகுத்து, அதற்கு முன்னணி பரத கலைஞர்களை நாட்டியம் அமைக்கச் செய்து மேடை நிகழ்ச்சி வழங்கியது.

''திருக்குறள் - அறத்துப்பாலில் அறுபது பாடல்களை 'வாழும் வள்ளுவம்' என்று தொகுத்து ஜெயஸ்ரீ, அருணா சாய்ராம், சௌம்யா, ஓ.எஸ். அருண் ஆகியோரைப் பாட வைத்திருக்கிறோம். இசைக் கருவி களைக் கொண்டு சாஸ்த்ரியமான சங்கீதத்தில் கிறிஸ்து பிறப்பு பாடல் களைக் கொண்டு வந்திருக்கிறோம். இன்னும் தமிழ் மையத்திடம் பல ஐடியாக்கள் இருக்கின்றன. சொன் னால் யாராவது அதை முன்னமே செய்து விடுவார்களே'' என்று ஜகா வாங்கியவரிடம், ''இந்த முறை சங் கமம் சர்ச்சையாகாமல் இருக்க என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள்?'' என்றால், ''சர்ச்சைகளைக் கிளப்பு பவர்கள் பல காரணங்களால் கிளப்பு கிறார்கள். நமது நோக்கம் தெளிவாக இருந்தால் எதற்கும் பயப்படத் தேவையில்லை'' என்கிறார்.

– கௌசி





தயானந்த சரஸ்வதி சுவாமிகள்

# சீஸன் சுவாரஸ்யங்கள்!



முரளிதர சுவாமிகள்



நாராயணமூர்த்தி

### ரவைக்குத் தனியே...

**மா**ர்கழியில் கொட்டுகிற மழை. மியூசிக் அகாடமி வாசலில் வந்திறங்கிய மாமி-மாமாக்களுக்குக் குடை பிடிக்க பாய்ந்து பாய்ந்து முன்வந்தனர் வாலன்டியர்கள். இந்த 'நற்பணி மன்றத்தினர்' மத்தியில் நிறைய 'ஹிந்து' முகங்கள் தெரிந்தன. (கர்டஸி அகாடமி தலைவர் ஹிந்து முரளி). சின்னச் சின்ன விஷயங்களில் கூர்ந்து கவனம் செலுத்தி பெரிய அளவில் திருப்தியைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறது அகாடமி நிர்வாகம். கான்டீனில் கசமுசவென்று கூட்டம் நெருக்கியடிக்காமல் ஒழுங்குபடுத்தப்படுகிறது. (டிஃபன் சுமார்தான்!) கை கழுவும் இடம் சுத்தம்; கழிப்பறைகள் நவீனப்படுத்தப்பட்டு எப்போதும் சுத்தமாக இருக்கின்றன. அரங்கின் உள்ளே, மேடை மேல், கலைஞர்கள் உட்காரும் இடத்தில், மிருதங்க பகுதிக்குத் தனி விரிப்பு - ரவையைக் கொட்டிப் பிசைந்து சிதறினால் தனியே எடுத்து உதறலாம் அல்லது மாற்றிவிடலாம்!

ஒலி அமைப்பு துல்லியம் பெற்றிருக்கிறது. போஸ் ஆடியோ சிஸ்டம் என்ற அதி நவீன ஒலிபெருக்கி நிறுவனத்தினர் அதனைச் சீர் செய்துள்ளனர்.

### டி.வி.க்காக

**ஜெ**யா டி.வி. நடத்திய மார்கழி மகோத்ஸவத்தில் தனி ரகமான ரசிகர்கள். எட்டு மணியோடு நிகழ்ச்சிகள் முடிந்து விடுவதால் ஹவுஸ் ஒய்ஃபுகள் அதிகம் பளிச் உடையில் கொஞ்சமாக மேக்-அப்புடன் (டி.வி.யில் தெரியணுமே)... வெட்கமும் பூசிக்கொண்டு பால்யத்தில் கற்ற ராகங்களையும் கீர்த்தனைகளையும் 'பிரஷ்-அப்' செய்து கொள்ளவும், தங்களுக்குத் தெரிந்ததையும் தெரியாததையும் வெளிப்படுத்தி கேள்வி நேரத்தின்போது வினா எழுப்பவும் இவர்களுக்கு நல்ல சந்தர்ப்பம். ஸ்கூல் விட்டு வரும் பேரக் குழந்தைகளின் ஹோம் ஒர்க், டிஃபன் - காபி சகிதம் வரும் பாட்டிகளும் நிறைய.

### அசோக் நகரில்...

**இ**ன்ஃபோஸிஸ் நாராயண மூர்த்தி, கணபதி சச்சிதானந்த சுவாமிகள், தயானந்த சரஸ்வதி சுவாமிகள் என்று இசை விழா தலைமைக்கு வித்தியாசமாக இவ்வாண்டு அழைக்கப்பட்டிருந்தனர். முரளிதர சுவாமிகள் தாமே முன்னின்று ஓர் இசை விழா ஏற்பாடு செய்திருக்கிறார் - தமிழிசை விழா-டிசம்பர் 22 தொடங்கி ஐந்து நாட்களுக்கு அசோக் நகரில் நட்சத்திரக் கலைஞர்களின் தமிழிசைக் கச்சேரிகள் நடைபெறும்.



**தும்புரு**
(டிராக் -II)

மெனி ஹேப்பி ரிடர்ன்ஸ், ஹேப்பி நியூ இயர் போன்ற பாதிப்புகளால், ஆங்கிலேயனை அசரீரியாக இன்னமும் நம் Well Fareல்தான் வைத்துக் கொண்டிருக்கிறோம்.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

*பழங்காலத்து மன்னர்களில் தங்களுக்குப் பிடித்த மன்னர்கள் யார் யார்?*

எல்லாப் பிரச்னைகளுக்கும் தெனாலி ராமனிடம் ஆலோசனை கேட்ட கிருஷ்ண தேவராயர். பீர்பாலை அங்கீகரித்து அணுகிய அக்பர்.



# தலைவணங்கத்

● என்.கோமதி, நெல்லை

*சிரசாசனம்... சிம்மாசனம்... இதில் கிரேஸிக்குப் பிடித்த ஆசனம் எதுவோ?*

சிரசாசனம் எனக்குச் சிம்ம சொப்பனாசனம். தலைகீழாக நின்று பார்த்து விட்டேன். ஏனோ இந்த சிரசாசனம் மட்டும் சரியாகவே வரமாட்டேன் என்கிறது. காரணம், எங்கள் வீட்டுத் தரையும் மொஸைக், என் தலையும் மொஸைக்... எனக்குப் பிடித்த ஆசனம் 'சிரிசாசனம்'.

● எம்.அசோக்ராஜ், அரவக்குறிச்சிப் பட்டி

*இப்போதும் வெள்ளையர்கள் நம்மை ஆண்டுகொண்டிருந்தால்...?*

வெள்ளையனுக்கு Fare-well சொல்லி விரட்டிவிட்டோம். ஆனால், மம்மி - டாடி,

● குமுதினி, கோயம்புத்தூர்

*தலைவனாக இருக்க என்ன தகுதி வேண்டும்?*

தமக்குப் பின் வரும் தொண்டர்களைத் தரதரவென்று உயர் தரத்துக்கு முன் இழுத்துச் சென்று நிறுத்துபவனே தலைவன். தர்மம் தலை காக்கும்; தலைவன் தர்மத்தைக் காப்பான்.

● அனன்யா, திருச்சி

*புதிதாக ஏதாவது ஒரு பழமொழி சொல்ல முடியுமா?*

இந்த கம்ப்யூட்டர் ஸெல் யுகத்துக்குப் பொருத்தமாக, இதோ மூன்று Fruit Punch. அதாவது முப்பழ மொழிகள்.

'ஈ-மெயிலுக்கு ஸ்டாம்ப் ஒட்டினானாம் இடியட்டு', 'சைலண்ட் மோடுக்குத் தெரியுமா ரிங்-டோன் Ringகாரம்', 'கற்றோருக்குச் செல்லுமிடமெல்லாம் சிறப்பு. Cell உற்றோருக்கு Roaming இருந்தால்தான் சிறப்பு.'

● **வித்யா, பெங்களூர்**

***'ஐ லவ் யூ' என்று ரூபாய் நோட்டில் எழுதி, காதலைப் பகிர்ந்துகொள்கிறார்களே?***

இதுபோன்ற கரன்ஸித்தனமான சில்லறைக் காதல் வழக்கங்கள் தொடர்ந்தால்... தெய்வீகக் காதல்போல, கள்ள நோட்டுக் காதல், கறுப்புப் பணக் காதல், கிழிந்த அழுக்கு நோட்டுக் காதல், ரூபாய்க்கு எட்டு எனக் கூறுகட்டி விற்கும் காதல்கள் அமலுக்கு வரலாம்.

● **அ.கஹைறல் ரஹ்மான், திருச்சி**

***ஆஸ்கார் விருது நம்மைத் தேடி வரவேண்டும் என்பதுதானே சரி?***

நமக்கென்று அதான் தேசிய விருது இருக்கிறதே! அதை வாங்க முயற்சித்தால் போதாதா! சங்கீதக் கலாநிதி விருது வாங்க மைக்கேல் ஜாக்ஸன் மியூசிக் அகாடமியைத் தேடி வரட்டும். அதன் பிறகு நாம் ஆஸ்காரைத் தேடிப் போவோம்.

● **ரேனு சந்திரா, மைலாப்பூர்**

***கர்நாடக சங்கீதத்தில் எந்தப் பாடகியின் கச்சேரி மிகவும் பிடிக்கும் (ஒருவரைத்தான் கூற வேண்டும், மாட்டிக்கிட்டீங்களா)...?***

சுதாநித்யசௌம்ய அருணாஜெயஸ்ரீ. நீங்க 'நாட்டி' என்றால், நான் கர்நாட்டி!

● **பகவதி பெருமாள், சென்னை**

***எழுதும்போது உங்களுக்கு ஏதாவது கிரேஸி செண்டிமெண்ட்ஸ் உண்டா?***

உறங்கும்போது 'உம்மாச்சி' (தெய்வம்) ஐடியா கொடுப்பார் என்ற செண்டிமெண்ட் எனக்குண்டு. அதனால் தலையணைக்கு அடியில் பக்தி சுலோகப் புத்தகங்களை வைத்துக்கொள்வது வழக்கம். தொடர்ச்சியாக எழுதும் நாட்களில் இந்த ஆவேசம் உக்ரமாகி, ஓர் உச்சகட்டத்துக்குச் செல்லும். அப்போது பெரிய எழுத்து பாகவதம், பதினெட்டு புராணம், விளக்க உரையோடு விரிவான பகவத் கீதை போன்ற தடிமனான புத்தகங்கள் தலையணைக்கு அடியில் சேர ஆரம்பிக்கும். இதன் விளைவாக, சில சமயங்களில் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படும் அளவுக்கு என் தலை உயர்ந்து, கிட்டத்தட்ட நின்றுகொண்டே தூங்கும் ஹடயோக போஸில் உறங்கியதுண்டு.

# தகுதி என்ன..?

● **டி.ஜெய்சிங், கோயம்புத்தூர்**

***கற்பூர புத்திக்காரனுக்கும், டியூப் லைட் புத்திக்காரனுக்கும் உதாரணம் கூற முடியுமா?***

'தேவை நானா, இல்லை என் படை பலமா?' என்று கண்ணன் கேட்டபோது, 'எனக்குத் தேவை நீ அல்ல; உன் படைபலம்தான்' என்று அவசர அவசரமாக, முந்திக்கொண்டு கூறிய துரியோதனனுக்கு டியூப்லைட் புத்தி. 'வழிகாட்ட டிவைன்-லைட் நீதான் வேண்டும்' என்று ஆற அமர, நிதானமாகக் கூறிய அர்ச்சுனனுக்குக் கற்பூர புத்தி. ●

# கண் இமைக்காமல் காப்பவள்

## ஸ்ரீ லலிதா – இரண்டாம் பாகம்

பகவானுக்கு ரொம்ப வயது இருக்க வேண்டும். ஏனென்றால் எங்கள் பாட்டியும் இந்த பகவானைத்தான் சொன்னாள். பாட்டிக்குப் பாட்டியும் இதே பகவானைத் தான் சொன்னாள். இப்படியே போனால் எதிலே போய் முடியும்! அப்படியானால் பகவான் ரொம்ப வயதானவராக அல்லவா இருக்க வேண்டும்! ஆனால், மாணிக்க வாசகர் என்ன சொன்னார்?...

''பகவானுக்கு ரொம்ப வயசு ஆகிவிட்டது; ஆனால், அவருக்கு வயசே ஆகவும் இல்லை!'' என்றார் மாணிக்கவாசகர்! - ''முன்னை பழைமைக்கும் பழைமையாக இருக்கக் கூடியவர்; பின்னை புதுமைக்கும் புதுமையாக இருக்கக்கூடியவர்'' என்றார். மூத்ததில் மூத்தது - ஏனென்றால், அவருடைய ஆதியும் அந்தமும் எங்களுக்குத் தெரியாது. ஆனால், அதே சமயத்தில் மிக நவீனமானது - புதுசானது - என்று ஒரு வார்த்தையைப் போட்டார்! - பின்னை புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியனே.

பின்னை புதுமைக்கும் புதுமை என்று சொல்லவில்லை. 'பெயர்த்தும் அப்பெற்றியனே' என்கிறார். - புதிதாக வருகிறது. அப்படிப் புதிதாக வந்ததும் பழசாகி, அதற்கப்புறமும் ஒன்று புதிதாக வருகிறது. அதுவும் பழசாகி, அதற்கப்புறமும் ஒன்று புதிதாக வருகிறது என்றால், பெயர்ந்து பெயர்ந்து புதுமைகள் வர வர, அந்தப் புதுமைக்கும் புதுமையாக இருக்கக்கூடிய தன்மையினன் பகவான்! ஒவ்வொரு புதுமையாகத் தோன்றத் தோன்ற அதனினும் புதுமையாக அவன் இருப்பான்!

அப்படியானால் பகவானுக்கு எவ்வாறு வயது சொல்வது? ஆனால், அபிராமி பட்டர் சொல்லிவிட்டுப் போய்விட்டார் - 'என்றும் மூவா முகுந்தர்க்கு இளைய வளே' என்று! ஆகவேதான், பத்மநாப சகோதரி என்ற நாமம், இளைய சகோதரியாக அவளைக் குறிப்பதாகக் கொள்ள முடிகிறது.

### நாராயணி

அம்பாளுக்கே நாராயணி என்கிற ஒரு திருநாமம் பின்னால் வரும். ரொம்ப விசேஷமான திருநாமம் அது.

'பவன்'என்று சொன்னால் அது சிவ காமேசுவரனைக் குறிக்கக்கூடிய திருநாமம் என்பதைப் பார்த்தோம். பவனுக்குப் பெண்பால் பவானி. அப்படியானால், நாராயணி என்பது நாராயணனுக்குப் பெண்பாலா என்றால் அவ்வாறு இல்லை. நாராயணன் என்பது மஹாவிஷ்ணுவைக் குறிக்கும். நாராயணி என்பது நாராயணனின் தர்மபத்னி மஹாலக்ஷ்மியைக் குறிக்காது; அம்பிகை பரமேசுவரியைத் தான் குறிக்கும்.

காரணம் என்னவென்றால், நாராயணனும் நாராயணியும் ஒரே வடிவம்; ஒரே ஸ்வரூபம். இரண்டு பேருமே இந்த உலகத்

சுதா சேஷய்யன்

தைக் காப்பாற்றுவதற்காக, ஸ்திதி செய்வதற்காக ஆண் வடிவத்தையும் பெண் வடிவத்தையும் தாங்கி நிற்கக்கூடியவர்கள். அவ்வாறு ஒரே ஸ்வரூபமாக இருப்பதால் தான் நாராயணன்; நாராயணி. அப்படி நாராயணியாக இருக்கக்கூடியவள்தான் பத்மநாப சகோதரி. அம்பாள் கையிலேயும் பல சமயம் சங்கும் சக்கரமும் உண்டு. அம்பாளும் விஷ்ணு துர்கையாக இருக்கும்போது, சங்கு, சக்கரம் தாங்கி நிற்பாள். அதே மாதிரி, மஹாவிஷ்ணு எதையெல்லாம் செய்கிறாரோ, அதையெல்லாம் அம்பாள் செய்யக்கூடிய வழக்கமும் உண்டு. அதனால்தான் முன்னாலேயே ஒரு திருநாமம் தன்னுடைய பத்து விரல்களின் நகங்களிலிருந்து தசாவதாரங்களை எடுக்கக்கூடியவள் என்று பொருள்பட அமைந்தது - **(கராங்குலி நகோத்பன்ன நாராயண தசாக்ருதி)** மஹாவிஷ்ணு எடுத்த அதே பத்து அவதாரங்களை அம்பாள் தனது திருக்கையில் இருக்கக்கூடிய பத்து விரல்களின் நகங்களிலிருந்து கொண்டு வந்தாள் என்றால், அம்பாளுக்கு இருக்கக்கூடிய ஆர்வம் எத்தகையது; காப்பாற்றுவதில் அவளுக்கு எத்தனை ஆர்வம்! குழந்தைகளைப் படைப்பது பெரிதல்ல; அந்தக் குழந்தைகளைப் பேணிப் பராமரிப்பது, அந்தக் குழந்தைகள் நன்றாக வளர வேண்டும் என்பதற்காகவே தன்னை - தன் ஸ்வரூபத்தை வைத்துக்கொண்டிருக்கக்கூடியவள் அம்பாள் என்பதால், பத்மநாப சகோதரியாக இருக்கக் கூடியவள்.

## நிமிஷம் என்பது என்ன?

அவ்வாறு இருக்கக்கூடியவள் என்ன செய்கிறாள் - காப்பாற்றுவதற்காக எவ்வளவு தூரம் கவனம் செலுத்துகிறாள் என்பதைக் குறிப்பதுதான் அடுத்த திருநாமம். அம்பாள் கண்ணைச் சிமிட்டினாளா இல்லையா? - இதைப் பற்றிய திருநாமம்!

**உன்மேஷ நிமஷ உத்பன்ன விபன்ன புவனாவளி**

நிமேஷ என்பதுதான் நிமிஷம் என்பதாகும். இன்றைக்கு ஆங்கிலத்தில் மினிட் என்கிறோம். ஒரு மணி நேரத்துக்கு அறுபது நிமிடங்கள். இந்த 'அறுபது நிமிடம்' என்பது நாம் வேகவேகமாகப் போட்ட ஒரு கணக்கு; மொழிபெயர்ப்பு. நிமிஷம் என்பது ஆதியில் - கிரந்தங்களில் இருக்கக்கூடிய கால அளவு. அந்த அளவுக்கும் இன்று நாம் சொல்கிற நிமிடம் (மினிட்) என்பதற்கும் ஒப்புவமை கிடையாது. நிமிஷம் (கிரந்தங்களில் உள்ளது) என்பதற்கு என்ன அர்த்தம் என்றால், கண்ணைச் சிமிட்டுவதற்கு எத்தனை நேரம் ஆகுமோ, அதுதான் ஒரு நிமிஷம். ஆனால், காலப்போக்கில் என்னவாயிற்று, மினிட் என்கிற ஆங்கில வார்த்தை வந்தது. அதற்கு ஒரு தமிழ்ச்சொல் கண்டுபிடிக்க வேண்டும். 'மினிட்' 'நிமிட்' எல்லாம் ஒரே மாதிரி இருந்தன. இரண்டையும் சேர்த்து அதற்கு இது மொழிபெயர்ப்பு என்று



ஆகிவிட்டது!

## ஆதி கிரந்த அர்த்தம்

**ஆ**னால், கிரந்தங்களில் ஆதியில் நிமிஷம் என்கிற சொல் என்ன பொருளில் பயன்படுத்தப்பட்டது என்பதை நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். அப்போது தான் இந்த நாமாவளியின் அர்த்தம் சரியாகப் புரியும். இந்த இடத்தில் நிமிஷம் என்பது கண்ணைச் சிமிட்டுதலையே குறிக்கும். நிமிஷம் என்பதற்கு எதிர்ப்பதம் உன்மேஷம் - கண்ணைச் சிமிட்டாமல் இருத்தல்; விழித்துக்கொண்டு சிமிட்டாமல் இருப்பது. உன்மேஷ - சிமிட்டாமல் இருப்பது; நிமிஷ - சிமிட்டுவது. கண்ணைச் சிமிட்டாமலே வைத்திருந்தால் என்ன ஆகும்? சிமிட்டினால் என்ன நடக்கும்?

அம்பாள் கண்ணைச் சிமிட்டினால், அந்தச் சமயத்தில் உலகம் இருண்டு போகும். அம்பாள் கண்ணை விழித்துக் கொண்டிருந்தால், அந்தச் சமயத்தில் உலகம் ஒளிமயமான பிரகாசத்தை அடையும்.

இப்போது அம்பாள் என்ன பண்ணுகிறாள்? கண்ணைச் சிமிட்டுகிறாளா, இல்லையா? இந்த நாமாவளியில் என்ன சொல்லியிருக்கிறது - **உன்மேஷ நிமிஷ உத்பன்ன விபன்ன புவனாவளி.** - நீ உன்னுடைய கண்ணைச் சிமிட்டினால் அது எனக்கு இருட்டு. கண்ணைச் சிமிட்டாமல் வைத்துக் கொண்டிருந்தால் அதுதான் உற்பத்தியைத் தரக்கூடிய, இந்த உலகத்தைத் தோற்றுவிக்கக்கூடிய, சிருஷ்டியைத் தரக் கூடிய, பிரகாசத்தைத் தரக்கூடிய தன்மை. உன்மேஷம் என்பது உத்பன்னம்; நிமிஷம் என்பது விபன்னம். அம்பாள் கண்களை மூடிக்கொண்டால் உலகம் இருண்டு பிரளயத்துக்குள் போய்விடும். அவள் திருக் கண்களை இமைக்காமலே இருந்து, உலகை சிருஷ்டியில் செலுத்திக்கொண்டிருக்கிறாள்.

அம்பாள்
கையிலேயும்
பல சமயம் சங்கும்
சக்கரமும் உண்டு.
அம்பாளும் விஷ்ணு
துர்கையாக இருக்கும்
போது, சங்கு சக்கரம்
தாங்கி நிற்பாள்.

## தேவ தன்மை

**சா**தாரணமாக முப்பத்து முக்கோடி தேவர்களும் கண்களைச் சிமிட்டுவதில்லை என்று சொல்வதுண்டு. ஒரு பெரிய கூட்டம் இருக்கிறது. அந்தக் கூட்டத்தில் தேவர்கள் இருக்கிறார்களா, மனிதர்கள் இருக்கிறார்களா என்று எப்படிக் கண்டுபிடிப்பது? புராணங்கள் இதற்குச் சொல்லக்கூடிய வழிகள் இரண்டு: ஒன்று அவர்களுடைய கண்களைப் பார்க்க வேண்டும்; மற்றொன்று அவர்களுடைய கால்களைப் பார்க்கவேண்டும். அந்தக் கால்கள் தரையில் பாவமாட்டா. தரையைவிட்டுக் கொஞ்சம் மேலேயே அவை இருக்கும்.

கால் தரையில் பாவாமல் இருக்கக் கூடிய தேவ தன்மை என்பது, உயர்ந்தவர்களாக இருக்கக்கூடியவர்கள், பூமியில் பதியாமல் மேலே ஏறிக்கொண்டிருப்பதை உணர்த்துகிறது. அதனால்தான் மஹாபாரதத்தில், பொய் சொல்கிற வரையில் தருமனுடைய தேர் கொஞ்சம் உயரத்திலேயே இருந்தது. பொய் சொன்னதும் தரையைத் தொட்டது. தர்மபுத்திரர் தேவ தன்மை உடையவராக, உயரம் நோக்கிப் போகக்கூடியவராக இருந்தவரையில், பூமியிலிருந்து சற்றே உயர்ந்த நிலையில் இருந்தார்.

கண்ணைப் பார்த்தும் தேவ தன்மையைக் கண்டுபிடிக்கலாம். தமயந்தி நளனை அப்படித்தான் அடையாளம் கண்டாள்!

(வளரும்)

ரமேஷ் பவாரின் அண்ணன் கிரன் பவார் மும்பை அணியில் சேருவதற்கு மிகவும் மெனக்கெட்டார். ஆனால், அவருக்குக் கதவு திறக்கப்படவேயில்லை. அஸ்லாம், கோவா என்று அணி மாறினார். கைக்காசு செலவு செய்து பயணங்கள் செய்தார். ரிசர்வ் செய்யப்படாத ரயில் வண்டியிலும் பேருந்திலும் கிரிக்கெட் மட்டை, ஹெல்மெட் சகிதம் பயணம் செய்தார். அயர்ச்சியோடு அப்படியே மைதானத்துக்குச் சென்று ரஞ்சிப் போட்டியில் ஆடினார். பலன் பூஜ்ஜியம்.

ஆனால், இப்போது தன் வாழ்க்கையிலேயே முதல்முறையாக ஐந்து நட்சத்திர விடுதியில் தங்கி கிரிக்கெட் மேட்ச்சுகளை ஆடியிருக்கிறார் கிரன் பவார். பிரையன் லாராவுடன் ஒரே அறையில் தங்கி, சிரித்துப் பேசி இரண்டு வாரங்களைச் சுகமாகக் கழித்திருக்கிறார். 'முன்பெல்லாம் எங்களைச் சீந்த ஒருவரும் கிடையாது. ஆனால், இன்று எங்களுக்கு வேண்டிய பணமும், வேண்டிய வசதியும் முக்கியமாக, உலகின் தலைசிறந்த கிரிக்கெட் வீரர்களுடன் இணைந்து ஆட ஒரு வாய்ப்பையும் அளித்திருக்கிறது ஐ.சி.எல்.'' என்று உருகுகிறார் அவர்.

'பி.சி.சி.ஐ. புறக்கணித்தால் கவலை வேண்டாம். என்னிடம் வருக' என்று

# ஜெயித்தார்

கபில்தேவ் சில மாதங்களுக்கு முன்பு அறைகூவல் விடுத்தார். அது இன்று நிஜமாகியிருக்கிறது. மிக வெற்றிகரமாக சண்டிகரில் ஐ.சி.எல். 20 - 20 போட்டியை நடத்தி முடித்திருக்கிறார்கள் ஜீ குழுமத்தின் தலைவரான சுபாஷ் சந்திராவும், கபில் தேவும். சென்ற வருடம் பி.சி.சி.ஐ. நடத்திய



ச.ந.கண்ணன்





# கபில்தேவ்!

அகில இந்திய 20 - 20 போட்டியை தமிழக அணி வென்றது. ஐ.சி.எல். நடத்திய 20 - 20 போட்டியை சென்னை சூப்பர் ஸ்டார்ஸ் அணி வென்றிருக்கிறது.





ஐ.சி.எல்.லின் வரவால் இப்போது புதிய கதவுகள் திறக்கப்பட்டுள்ளன. இங்கிலாந்திலும் இதர கிளப்புகளிலும் விளையாட பல இந்திய வீரர்களுக்கு வாய்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. ''என்னைப் பயிற்சியாளராக்க எந்த முயற்சியையும் பி.சி.சி.ஐ. எடுக்கவில்லை'' என்கிறார் சந்தீப் படேல். இவர் இப்போது ஐ.சி.எல். கூடாரத்தில். ஒவ்வொரு அணிக்கும் பிரபல வீரர்கள் பயிற்சியாளராக இருந்து ஆட்டக்காரர்களுக்கு உதவியிருக்கின்றனர். ஆஸ்திரேலிய அணிக்கு உடற்பயிற்சியாளராக இருந்த கேம்பல் என்பவரை அழைத்து வந்து அனைத்து வீரர்களுக்கும் ஃபிட்னஸ் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. 'இவர்கள் கொடுக்கும் பயிற்சிகள் பெண்டு நிமிர்த்துகின்றன. இதுபோல் என் வாழ்க்கையில் ஒரு போதும் பயிற்சிகள் எடுத்ததில்லை'' என்கிறார் முன்னாள் இந்திய டெஸ்ட் அணி வீரரான தீப் தாஸ் குப்தா.

முக்கியமாக, எல்லோருக்கும் பேசிய தொகையில் 25 சதவிகிதத்தை முதல் ஆட்டம் நடப்பதற்கு முன்னரே பட்டுவாடா செய்துவிட்டனர். ஒவ்வொரு வீரரும் மூன்று வருடங்களுக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளனர். ஓரளவு சுமாரான வீரருக்குக் கூட மூன்று வருடங்களுக்கு 75 லட்சம் வரை தரச் சம்மதித்திருக்கிறது ஐ.சி.எல்.

இந்திய கிரிக்கெட் அணியின் ஃபீல்டிங்கைவிட ஐ.சி.எல். அணி வீரர்களுடைய ஃபீல்டிங் மிக அபாரமாக இருந்திருக்கிறது. ஒவ்வொரு அணியிலும் தலா இரண்டு ஜாண்டி ரோட்ஸ். இந்தப் போட்டியில் கபில்தேவுக்கு ஏற்பட்ட ஒரே ஏமாற்றம், பிரையன் லாரா. ஆறு ஆட்டங்களில் அவர் எடுத்தது மொத்தம் 31 ரன்கள். ஒப்பந்தப்படி லாராவுக்கு நான்கு கோடி ரூபாயை வழங்கியிருக்கிறார்கள்.

அடுத்த வருடம் நான்கு போட்டிகளை நடத்துகிறார்கள். தவிர ஐ.சி.எல்.லில் இணைந்துள்ள இந்திய வீரர்களை ஆஸ்திரேலியாவுக்கு அழைத்துச் சென்று பயிற்சி அளிக்கவும் திட்டமிருக்கிறது. ஐ.சி.எல். போட்டிகளை இந்தியா - பாகிஸ்தான் ஆட்டங்களுக்கு நிகராக ரசிகர்கள் ரசித்ததாக டி.ஆர்.பி. ரேட்டிங்குகள் தெரிவிக்கின்றன. சென்ற வருடம் ரஞ்சிப் போட்டியில் அதிக விக்கெட்டுகளை எடுத்த பெங்கால் வீரர் ரணதீப் போஸ், ஐ.சி.எல். பக்கம் சாய்ந்துவிடலாமா என்று யோசித்துக்கொண்டிருக்கிறார். ''நாட்டுக்காக ஆடுவதுதான் என் கனவு. ஆனால், யாருக்கும் சலாம் போட்டு எனக்குப் பழக்கமில்லை. இந்திய அணியில் சேர முடியாதபோது ஐ.சி.எல். நல்ல காசு தருவதாக இருந்தால், நிச்சயம் சேர்ந்துவிடுவேன்'' என்கிறார். ●

## ஆசிரியர் பக்கம்



# மார்க்கு வாங்கலியோ, மார்க்கு!

"போச்சு! நான் ஃபெயில் ஆயிடுவேன். பரீட்சையை நல்லாவே பண்ணலை..."

- நூற்றுக்கு நூறு அல்லது 99 வாங்கக்கூடிய மாணவிதான் பேசுகிறாள்!

"நீதான் நல்லா படிச்சிருக்கியே... உன் மனப்பூர்வமான முயற்சியே போதும் எங்களைத் திருப்திப்படுத்த மார்க் குறைஞ்சா பரவாயில்லை" - பெற்றோர் இப்படிப் பதில் சொன்னால், குழந்தை ஆறுதல் அடைவதற்குப் பதில் கலவரம் அடைகிறாள்:

"நான் ஃபெயிலானாலும் பரவாயில்லைன்னு சொல்றீங்களா! நீங்களே இப்படிப் பேசினா நான் எப்படி உருப்படுவேன்?"

மதிப்பெண்களைவிட முயற்சியே முக்கியம் என்கிற உண்மை இன்றைய தலைமுறைக்குப் புரியாமலே போய்விட்டதற்குப் பெற்றோர்கள்தான் காரணம். மேற்படி மாணவியின் பெற்றோர் விதிவிலக்கு. அவர்கள் விதிவிலக்காக இருப்பதனாலேயே அவர்களுடைய அன்பும் ஆதரவும் குழந்தைக்குப் புரியவில்லை! தமது நண்பர்கள் வட்டத்தின் இதர பெற்றோர் மதிப்பெண்கள் குறித்து மிரட்டுவதும், குழந்தைகளை வற்புறுத்துவதுமாக இருக்க, அந்த நடைமுறையையே பெற்றோருக்குரிய சரியான இயல்பாகக் கருதுகிறாள் இந்த மாணவி!

மதிப்பெண்கள், மாணவர்களின் புரிந்துகொள்ளும் திறனைக்கூட பிரதிபலிப்பதில்லை. அவற்றைப் பண்பாட்டின் அடையாளமாக எப்படி ஏற்பது! மனித நேயமும் சிறந்த விழுமியங்களும் மதிப்பெண்களைக் காட்டிலும் முக்கியம் என்பதற்குப் பதிலாக, 'மார்க் வாங்காவிட்டால் அவமானம்; வெட்கக் கேடு' என்கிற அச்சுறுத்தலையே பெற்றோர்கள் தினமும் குழந்தைகளிடம் கையாள்கிறார்கள்.

அலுவலகத்திலிருந்தபடி மகளின் நடவடிக்கைகளை செல்ஃபோன் மூலமே கண்காணித்து வரும் ஒரு தாய், அந்தக் குழந்தை ஏதோ ஒரு பள்ளிப் பரீட்சையில் சரியாக எழுதவில்லை என்பதற்காக, 'மார்க் குறைந்தால் எங்காவது போய் செத்துவிடு!" என்று சபித்திருக்கிறாள். இந்தச் சாபம் காதில் விழுந்த அதிர்ச்சியில், சக ஊழியர்கள் கவலை கொண்டு இந்தப் பிரச்னை குறித்து எழுதும்படி நம்மிடம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

பிரச்னைக்கு ஒரு காரணம்தான் தோன்றுகிறது. பெற்றோரின் குற்ற உணர்வு - குழந்தைகளுடன் போதுமான நேரம் செலவிட முடியாத, கவனம் செலுத்த முடியாத குற்ற உணர்வு! மார்க் வாங்குவதை சமூக நிர்ப்பந்தமாக மாற்றித் தங்கள் குற்ற உணர்வுக்கு வடிகால் தேடிக் கொள்ளும் இந்தப் பெற்றோர்கள், இளம் தளிர்களை நஞ்சால் கருகடிக்கிறார்கள். ●

‘ஆயுதம் செய்வோம்’ படத்தில் சுந்தர்.சி, அஞ்சலி...

கையால் வழி
மறைக்கலாம் - கறுப்புக்
கண்ணாடியால்
விழி மறைக்கலாம்
முரட்டு மஞ்சள்
சட்டை கொண்டு
நெஞ்சை நீ
மறைத்தாலும்,
எதைக் கொண்டு
மறைப்பாய்
நானிருக்கும்
உன் இதயத்தை!



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57"Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to
post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.